KALKI
6.4.2006 ரூ.8.00
80 பக்கங்கள்

# கல்கி

குடும்பத்துடன் களிக்க...

## மாதா அமிர்தானந்தமயி

எழுதும்...



## அன்பெனும் மழையிலே...

தொடர் ஆரம்பம்!

## சாமான்ய தேவதை சல்மா!

நம்பிக்கை • தரம் • வசந்த் & கோ

# தமிழ்ப் புத்தாண்டு கொண்டாட்டம்

இந்தியாவின் No.1 டீலர்

# வசந்த் & கோ



மிகக் குறைந்த விலையில்
அனைத்து பிராண்டு மொபைல் போன்கள்.
எளிய தவணை வசதியுடன்

## எங்களது இன்றைய விலையை ஒப்பிட்டுப் பார்த்து வாங்குங்கள்

**உலகத் தரம் வாய்ந்த 14 முன்னணி பிராண்டு ஏர்கண்டிஷனர்கள்**



ரூ.12,990/-க்கு Split A/C

- 3 ஏசிகளுக்கு மேல் வாங்குபவர்களுக்கு சிறப்பு தள்ளுபடி
- குறிப்பிட்ட ஏசி மாடல்களுக்கு 100 % வட்டியில்லா 15 முதல் 24 மாத தவணை வசதி
- உடனடி இன்ஸ்டலேஷன்

உங்கள் பழைய ஏசி எந்த நிலையில் இருந்தாலும்

**ரூ.4,500/-** தள்ளுபடியில் எக்சேன்ச் செய்து கொள்ளுங்கள்

**சிறப்பம்சங்கள்**

- 21" ஸ்டீரியோ கலர் டிவி ரூ. 5,990/- முதல்
- 14" கலர் டிவி ரூ. 4,190/- முதல்
- கிரில் மைக்ரோவேவ் ஓவன் ரூ. 3,300/- முதல்
- 6kg வாஷிங் மெஷின் ரூ. 4,300/- முதல்

- கிரெடிட் கார்டுகளுக்கு சர்வீஸ் சார்ஜ் இல்லை
- 0% வட்டி* • எக்சேன்ச் வசதி
- கிரெடிட் கார்டு மூலம் வாங்குபவர்களுக்கு 6 மாத எளிய தவணைமுறையில் மிக்ஸி, கிரைண்டர், ஃபேன், DVD என அனைத்து பொருட்களும்
- பிராஸஸிங் சார்ஜ் கிடையாது.

## தங்க நாணயம் இலவசம்!

பிளாஸ்மா டிவி, LCD டிவி, கேம்கார்டர், Side by Side Refrigerator ஆகியவைகளுக்கு



SAMSUNG | LG | PHILIPS | Carrier | ONIDA | Godrej | HITACHI | GENERAL | Whirlpool | SIEMENS
SONY | BPL | ULTRA | IFB | Haier | VIDEOCON | SHARP | Electrolux | HYUNDAI

சென்னை : தி.நகர் – 42010572, 42029797, 42010573 கோடம்பாக்கம் – 42010576 அடையார் – 42010579 சூளைமேடு – 42010582 புரசைவாக்கம் – 42010571 மயிலாப்பூர் – 42010578 ராயபுரம் – 42010584 வண்ணாரப்பேட்டை – 42010583 பாடி – 42010577 நங்கநல்லூர் – 42056514 ஆலப்பாக்கம்–போரூர் –42010581 தாம்பரம் – 42010575 செங்கல்பட்டு – 27426241, விழுப்புரம் - ஹாஸ்பிடல் ரோடு, வேலூர் – காட்பாடி ரோடு, ஆற்காடு ரோடு, சத்துவாச்சாரி, மதுரை – தெற்கு மாசி வீதி, திண்டுக்கல் – புதிய அக்ரஹாரம் தெரு, பழனி ரோடு, திருச்சிராப்பள்ளி – போர்ட் ஸ்டேஷன் ரோடு, தஞ்சாவூர் – சௌத் ராம்போர்ட், அரவிந்த் காம்ப்ளக்ஸ், பட்டுக்கோட்டை – அறந்தாங்கி ரோடு, திருநெல்வேலி ஜங்ஷன் – பராசக்தி பில்டிங்ஸ், புதுக்கோட்டை – அஞ்சுகா திருமண மண்டபம், பாளையங்கோட்டை – திருவனந்தபுரம் ரோடு, தூத்துக்குடி – பியர்ல் பிளாசா, கோவில்பட்டி – AKS தியேட்டர் ரோடு, நாகர்கோவில் – வடசேரி பஸ் ஸ்டாண்டு எதிரில். பாண்டிச்சேரி – மகாத்மா காந்தி ரோடு, கோயம்புத்தூர் – ஒப்பணக்கார தெரு, க்ராஸ் கட் ரோடு, சேலம் – முதல் அக்ரஹாரம் வைபவ் பிளாசா, ஈரோடு – பெருந்துறை ரோடு, கரூர் – 25, கோவை ரோடு, (K.V.B.பில்டிங் அருகில்) 236623 திருப்பூர் – குமரன் ரோடு, ஓசூர் – தாலுகா ஆபீஸ் ரோடு, பெங்களூர் – 101/1, கே.கே. ரோடு, (டபுள் ரோடு) பிரெஸ்டிஜ்கோர்ட்

ஞாயிறும் விற்பனை உண்டு



# பார்த்தாலே பரவசம்!

மீடியாவைப் பற்றிய பி.டி. உஷாவின் கருத்துக்கள் நச்.

- விஜயாரவி, ஈரோடு

'பட்டியல்' படம் பற்றிய பட்டியல் ரசிக்கும்படி இருந்தது.

- ஜெயபிரகாஷ், சர்க்கார்பதி

'பிளந்தது பா.ஜ.க.' தலையங்கம் மூலம் பெரிய கட்சிகளின் தற்போதைய அவல நிலையை உணர்த்திவிட்டீர்கள்.

- ஆர்.லட்சுமி, மதுரை

தமிழகத்தில், காங்கிரஸ் தி.மு.க.வுடன் நீக்கமறச் சங்கமமாகி விட்டது ஈ.வி.கே.எஸ்.இளங்கோவனின் மழுப்பலான பதில்களில் நன்றாகவே பளிச்சிட்டது.

- பொன்.இளவேற்கோ, மணவாள நகர்

கல்கி சதாசிவம் நினைவு அறக்கட்டளை விளம்பர விருது நிகழ்ச்சித் தொகுப்பு, நிகழ்ச்சியை நேரில் கண்டு மகிழ்ந்த அனுபவத்தைக் கொடுத்தது.

- நாகை சந்திரா, நாகப்பட்டினம்

'பரீட்சை என்னும் பாதகம்' 1948-லேயே கல்கி எவ்வளவு தீர்க்க தரிசனத்தோடு எழுதியிருக்கிறார்!

- இரா.கற்பகம், கோவை

சங்கர்பாபுவின் பெயரில்லாதவன் சிறுகதை பணம் எதையும் செய்யும் என்பதை உணர்த்தியது.

- ஜெ.துரைராஜ், சென்னை

அனல் பறக்க எரிமலைச் சீற்றத்துடன் பதிலளிக்கும் இளங்கோவனா இப்படி தெளிந்த நீரோடையாக, அமைதியாகப் பதில் கூறுவது... நம்ப முடியவில்லை.

- ரேவதிப்ரியன், ஈரோடு

காதலின் மெல்லிய உணர்வுகள் வெகு அருமையாகத் தெரிந்தது 'எதுவுமில்லாமல்' கவிதையில்.

- க.மோ.சிவா, கந்திகுப்பம்

மாடர்ன் டிரஸ் மகாலட்சுமியைப் பார்த்தாலே பரவசம்.

- எல்.எம்.மகாநந்தினி, திருவண்ணாமலை

உலகக் கவிஞர் உலகநாதனின் (?) 'கொள்கையோட ஊடலு! கொடுக்கலேன்னா ஓடலு' உலகமகா வரிகள்!

- ப.மூர்த்தி, பெங்களூர்

வட்டமேஜை

'ஒரு வார்த்தை' சிறுகதை யதார்த்தமாக இருந்தது.

- வெ.குருசங்கரன், சென்னை

பிறர்க்கென வாழும் பெருந்தகையான ஒரு மாதரசியின் கதையை அழகாகச் சொன்ன சிறுகதை 'யாருக்குச் சொந்தம்'!

- டி.கே.சுப்பிரமணியன், திருப்பரங்குன்றம்

தமிழகத்தில் தமிழைக் காப்பாற்ற பாடுபடுவதாகக் கூறுபவர்கள் பாரதி பாஸ்கரின் தேன் ஒழுகும் தமிழ்ச் சொற்பொழிவுகளை கேட்பது நல்லது.

- இரா.கல்யாணராமன், பெங்களூர்

'தேர்தல் நிலவரம்' பற்றின கார்ட்டூன் அருமை.

- எம்.தூசிமுத்து, சென்னை

அமெரிக்காவைக் குட்டும் தாத்தாவின் கட்டுரை, வல்லவனுக்கு வல்லவன் உண்டு என்பதை உறுதிப்படுத்தியது.

- தர்மன் பெரியசாமி, சென்னை

## ஸ்வீட் போஸ்ட்!



கருத்துக் கணிப்பு ரகசியங்கள் அம்பலமாக்கின அனைத்தையும்.

- சி.பரத், சென்னை

1991-96-ம் ஆண்டுகளில் ஆட்சியில் இருந்தபோது ஜெயலலிதாவால் பாதித் தமிழகம் பாழானதைக்கூட மறந்துபோய், 2001-ம் ஆண்டில் அ.தி.மு.க.வுடன் கூட்டணி வைத்துக் கொண்டாராமா ராமதாஸ்... ஜெயலலிதா நடிக்கவில்லை. ராமதாஸ்தான் நடிக்கிறார்!

- எஸ்.சையது முகமது, சென்னை

'சுதேசி' விமர்சனம் ரொம்ப க்ரேசி.

- த.சத்தியநாராயணன், அயன்புரம்

'ராஜினாமா நாடகம்' தலையங்கம் உண்மையின் மறுபக்கம்!

- வே.முருகேசன், சென்னை




# கல்கி

ஒவ்வொரு இதழும் உங்கள் பேழைக்கு

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் :
லக்ஷ்மி நடராஜன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
சீதா ரவி

ஆசிரியர் குழு :
ஆர்.சி. ஜெயந்தன்
மு.மாறன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்
ச.கார்த்திகேயன்

தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324

தொலைநகல் :
044 - 2225 1021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.440/-
ஆறு மாதம் : ரூ.220/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யுஎஸ். டாலர்

**Bharathan Publications Private Limited.**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

**இருளில்**
**மிதிபட்டு நசுங்கிக்**
**கூழாகிய கரப்பானின் தசையை**
**இரவெல்லாம் உருவிய எறும்புகள்**
**விட்டுச் சென்றிருக்கின்றன**
**மேலெழவியலாத சிறகுகளையும்**
**வேண்டியிராத குச்சிக்கால்களையும்**
**வெகு நூதனமாய்**
**என்னை எனக்குக் காட்டவென**

- நவீனமும், எளிமையும் நிரம்பிவழியும் இக்கவிதையின் தலைப்பு 'படிமம்'. சிறகடித்து வெளியேறத் துடிக்கும் மனம். சிறகிருந்தும் வீடே சிறையாய்த் தடுக்கும் நிஜம். இரண்டுக்கும் இடையில் மிதிபடும் தமது வாழ்க்கையை, நசுங்கிக் கிடக்கும் கரப்பான்பூச்சியின் மிச்சங்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும் இக்கவிதையை எழுதியவர் சல்மா.

ஆண்களின் ரத்தத்தைச் சூடாக்கும் புத்தம்புதுப் பெண்மொழியில் துணிச்சலாய் எழுதிவரும் பெண் கவிஞர்களில் முக்கியமானவர். கட்டுப்பாடுகள் நிறைந்த இஸ்லாமிய சமுதாயத்திலிருந்து எட்டு வைத்து முன்னேறியிருக்கும் இவர், தமது எழுத்துக்காக கதா விருது பெற்றவர். இன்னொரு பக்கம் தமது சமூகப் பணிக்காக பாரதிதாசன் பல்கலைக் கழகம் வழங்கிய தலைசிறந்த பஞ்சாயத்துத் தலைவர் என்ற விருதினையும் பெற்றிருக்கிறார்.

திருச்சி மாவட்டம், துவரங்குறிச்சி வட்டம், பொன்னுப்பட்டி சிறப்பு ஊராட்சியின் தலைவராக இருமுறை தேர்ந்தெடுக்கப்பட்ட சல்மா, தமது பஞ்சாயத்துக்கு உட்பட்ட ஒன்பது கிராமங்களின் ஒட்டடை படிந்த முகத்தை அடியோடு மாற்றிக் காட்டியிருக்கிறார். அதற்குப் பரிசாக இந்தத் தேர்தலில் மருங்காபுரி சட்டமன்ற தொகுதியின் வேட்பாளராக சல்மாவை களத்தில் நிறுத்தியிருக்கிறது. தி.மு.க. உள்ளாட்சி மன்றத்திலிருந்து சட்டமன்றத்துக்குள் அடியெடுத்து வைக்கத் துடிக்கும் சல்மாவின் வெற்றிக்கதை சிவப்புக் கம்பளம் விரித்த ராஜபாட்டை அல்ல. வழிநெடுகிலும் முட்கள். பாதை நெடுகிலும் பள்ளங்கள்... எப்படி ஜெயித்தார் சல்மா? கல்கிக்காக மனம் திறந்து பேசினார்...

"வெற்றியை அடைய ஆண் கொடுக்கக் கூடிய விலையும், பெண் கொடுக்கக் கூடிய விலையும் ஒன்றல்ல. பெண் நிறைய தியாகம் செய்ய வேண்டியிருக்கும். எல்லையற்ற சகிப்புத் தன்மையும், சமரசமும் தேவைப்படும். நமது சமூக அமைப்பில் ஒரு இந்துச் சகோதரிக்குக் கிடைக்கும் சுதந்திரத்தைக் காட்டிலும் என்னைப் போன்ற ஒரு இஸ்லாமியப் பெண்ணுக்குக் கிடைக்கும் சுதந்திரம் மிகமிகக் குறைவு. இஸ்லாமியப் பெண்களைப் பொறுத்த வரை நான்கு சுவர்கள் மட்டுமே அவர்களின் உலகம் என்பது எழுதப்படாத விதி. நாங்கள் பர்தாவுக்குள்ளேயே வாழ்க்கையை முடித்துக்கொள்ள வேண்டும். என்னைப் பார்க்க என் ஊருக்கு வந்தால், கறுப்பு பர்தாவுக்குள்தான் நீங்கள் காண முடியும்.

திருமணமாகும் வரை வீட்டைவிட்டு வெளியே போக முடியாது. அருகிலிருக்கும் திருச்சி, மதுரை போன்ற மாநகரங்களைப் பார்க்க வேண்டும் என்றால், உள்ளூர் மருத்துவரால் குணப்படுத்த முடியாதபடி தீவிர உடல் நலக்குறைவு ஏற்பட்டால்தான் சாத்தியம். இத்தனை இறுக்கமான சமூகத்தில், தன்னுடைய தனிப்பட்ட அடையாளத்தையோ, திறமையையோ வெளிப்படுத்த பெண்ணுக்கு உரிமையில்லை. இத்தகைய ஒடுக்குதல்கள், இழப்புகள், ஏக்கங்கள், கனவுகளை வெளிப்படுத்தும் வடிகாலாகக் கவிதைகள் எழுத ஆரம்பித்தேன். அதுவும் ஒரு தலைமறைவு எழுத்தாளரைப் போல, வீட்டுக்குத் தெரியாமல் பயந்து... பயந்து... ஒளிந்து... ஒளிந்து...

ஒன்பதாம் வகுப்பே அதிகம் என்று பள்ளிப்படிப்பை பாதியில் நிறுத்திவிட்டார்கள். தொலைதூரக் கல்வி பயிலவும் அனுமதி தரவில்லை. இந்த நேரத்தில்தான் நண்பர்கள் வழியே என் கைக்கு வாசிக்கக் கிடைத்த புத்தகங்கள் எனக்கு வெளியுலகை அறிமுகப்படுத்தின. கவிஞர் மனுஷ்யபுத்திரன் எனது பெரியப்பா மகன். போலியோவால் பாதிக்கப்பட்டவர். எனக்குக் கால்கள் இருந்தும், எங்கள் இருவருடைய நிலையும் ஒன்றாகவே இருந்தது. அவர் வழியே பெரியாரையும், மார்க்ஸையும் படிக்கும் வாய்ப்புக் கிடைத்தது. நவீன இலக்கியம் பரிச்சயமானது.

# சாமான்ய தேவதை சல்மா!

திருச்சியிலிருந்து வெளிவந்த 'சுட்டும் விழிச் சுடர்' என்ற சிற்றிதழில் எனது முதல் கவிதை வெளிவந்தது. திருமணத்துக்குப் பிறகு புகுந்தவீட்டில் நான் எழுதத் தடை விதித்தார்கள். ஆனால் என்னை மாற்றிக்கொள்ள முடியவில்லை. மாறாக என் பெயரை மாற்றிக்கொண்டு தொடர்ந்து எழுத ஆரம் பித்தேன்'' எனும் சல்மா, தொடக்கத்தில் எழுதி வந்தது ராஜாத்தி ரொக்கையா என்ற இயற்பெயரில்.

தொண்ணூறுகளில் தொடங்கி இரண்டாயிரம் ஆண்டுவரை இடைப்பட்ட பத்தாண்டுகள் உருது இலக்கிய உலகின் துருவ நட்சத்திரம் கலில் ஜிப்ரானின் காதலியின் பெயரான 'சல்மா'வுக்குள் ஒளிந்துகொண்டே ஒளிவீச ஆரம்பித்திருக்கிறார். கவிதையிலிருந்து சிறுகதை. சிறுகதையிலிருந்து நாவல் என்று தமது எழுத்துலகத்தை விரித்த சல்மாவின் முதல் நாவல் 'இரண்டாம் ஜாமங்களின் கதை'. இஸ்லாமியப் பெண்மை மீதான ஒடுக்குதல்களை, சொல்லப்படாத வரிகளின் வழியே தீவிரமாகப் பேசியிருக்கும் சல்மா, ஒரு பஞ்சாயத்துத் தலைவி யாக பொது வாழ்க்கைக்குள் எப்படி நுழைந்தார்? அங்கே அவர் சந்தித்த சவால்கள், சாதித்த விஷ யங்கள் என்ன...?

**“எ**னது முதல் கவிதைத் தொகுப்பு வெளி வந்தபோது நான் சந்தித்த துயரங்கள் இப்போது நினைத்தாலும் திகிலூட்டக் கூடியவை. ஆனால் இரண்டாவது தொகுப்பு வெளிவந்தபோது, நமது சூழலில் ஒரு படைப்பாளி பெறக்கூடிய அதிகபட்ச மதிப்பையும் சுதந்திரத்தையும் பெற்றுத் தரக்கூடிய வல்லமை எழுத்துக்கு இருப்பது என்னளவில் நிரூபணமானபோது மகிழ்ச்சியும், தன்னம்பிக்கையும் என்னை ஆட்கொண்டது. அந்த நேரத்தில் என் வாழ்க்கையில் மற்றொரு மிகப்பெரிய மாற்றத்தைக் கொண்டு வந்தது உள்ளாட்சித் தேர்தல். உள்ளாட்சித் தேர்தலில் முப்பத்து மூன்று சதவிகிதம் பெண்களுக் கான இட ஒதுக்கீடு அமல்படுத்தப்பட்டபோது வீட் டுக்குள் முடங்கிக்கிடந்த பல ஆயிரம் பெண்களை வெளியே கொண்டு வந்தது. அவர்களில் நானும் ஒருத்தி.

என்னுடைய கணவர் ஊரில் செல்வாக்கான ஆள். தம்முடைய ரப்பர் ஸ்டாம்பாக என்னைப் பயன்படுத்திக்கொள்ள வேண்டும் என்ற நோக் கோடு பஞ்சாயத்து தேர்தலில் என்னை நிறுத்தினார். அந்தச் சந்தர்ப்பத்தை நான் பயன்படுத்திக் கொண்டேன். வெற்றி பெற்ற பிறகே பெண்ணுக்கு அதிகாரம் எத்தனை முக்கியம் என்பதை உணர்ந்தேன். அதேநேரம் கணவரின் கையில் கைப்பாவையாக இருக்க நான் விரும்பவில்லை. எனக்கு வோட்டுப்



போட்ட மக்களின் நம்பிக்கையைக் காப்பாற்ற வேண்டும் என்பதில் உறுதியாக இருந்தேன். ஆனால் பெரிய சவால்கள் என்னை மிரட்டின.

இந்து சமுதாயப் பிரமுகர்களும் இஸ்லாமிய சமுதாயப் பிரமுகர்களும் கூடிப் பேசி, ஒருவரை ஒருமனதாகத் தேர்ந்தெடுத்து கேட்பதற்கெல்லாம் கையெழுத்துப் போடுகிற பொம்மைகளை பஞ்சாயத்துத் தலைவர்களாக வைத்திருந்தார்கள். இப்படி முப்பது ஆண்டுகளாக முறையான உள்ளாட்சித் தேர்தல் நடக்காத ஒரு சிறப்பு ஊராட்சியில் என்ன வசதிகள் இருக்கும்? ஒன்பது கிராமங்களில் துளி கூட சாலை வசதியோ, குடிநீர் வசதியோ, சுகாதார வசதியோ இல்லை. மனம் கொதித்துப் போய் முதலில் நிறைவேற்றிய



பணிகள் இவைதான்'' என்கிற சல்மா பள்ளிக்கூடங்களிலும் நவீன சுகாதர வசதியைச் செய்து கொடுத்ததோடு, பூப்பெய்திய காரணத்துக்காக பள்ளியிலிருந்து நிறுத்தப்பட்ட தமது மனக் காயத்துக்கு மயிலிறகால் மருந்திடுவதுபோல, கடந்த பத்தாண்டுகளில் பள்ளியை விட்டு ஒரு சிறார் கூட 'டிராப்அவுட்' ஆகிவிடாமல் பார்த்துக் கொண்டிருக்கிறார். சல்மாவின் செயல்பாடுகளைக் கண்ட பொன்னுப்பட்டி ஊராட்சியில் வசிக்கும் சாமான்ய மக்கள் இவரைத் தங்களது தேவதையாகக் கொண்டாடுகிறார்கள். பஞ்சாயத்தில் காலம் காலமாய் நடந்து வந்த ஊழல்களை ஒழித்துக் கட்டியதில் இறுதிவரை பின்வாங்காததால் இவரின் கற்பு குறித்து, எதிராளிகள் அவதூறு விமர்சனங்கள் பரப்பியபோதும் கலங்காமல் போராடியதை விவரிக்கிறார்.

"பஞ்சாயத்துக்கு உட்பட்ட சொத்துக்கள், பார்க்கிங் ஸ்டாண்டுகள் என லட்சக்கணக்கில் ஏலம் போகும் பலவற்றையும் வெறும் பத்தாயிரம் ரூபாய்க்கு ஏலம் விட்டு, பலர் ஏமாற்றி வந்ததைக் கண்டுபிடித்தேன். விடாப்பிடியாக நான்குமுறை ஏலத்தைத் தள்ளி வைத்து, நியாயமான தொகைக்குக் கேட்ட பிறகே ஏலம் விட்டு இழப்பைத் தவிர்த்தேன். எல்லாம் மூன்று லட்சம், நான்கு லட்சம் என்று ஏலம் எடுக்கப்பட்டன. அடுத்து பஞ்சாயத்துக்குச் சொந்தமான கடைகளை வெறும் நூற்று முப்பது ரூபாய் மட்டுமே வாடகை கொடுத்துக் கொண்டு முப்பது ஆண்டுகளாக சிலர் காலி செய்யவில்லை. நீதிமன்றத் தீர்ப்பு வந்த பிறகும் காலி செய்யும்படி கலெக்டர் உத்தரவு போடவில்லை. இதனால் கலெக்டரிடம் நேரடியாக நீதி கேட்பது என்று அவரைச் சந்திக்க இரவு எட்டுமணி வரை காத்திருந்தேன். அவரோ சந்திக்க மறுத்தார். நான் நகர்வதாக இல்லை. இரவு பத்து மணி, பதினொரு மணி என நேரம் நகர்ந்தது. நள்ளிரவைத் தொட்டும் கலெக்டர் அலட்சியப்படுத்தினார். இறுதியாக நொந்துபோய், 'நான் இதைச் சும்மாவிடப் போவதில்லை. உங்களை நீதிமன்றத்தில் சந்திக்கிறேன். நான் ஒரு எழுத்தாளரும் கூட' என்று கோபமாகச் சொல்லிவிட்டு வந்தேன். மறுநாளே சமாதானமாகி கடைகளை காலி செய்ய உத்தரவு போட்டார். உடனே எனக்கு வரிசையாகக் கொலை மிரட்டல்கள். அதற்கெல்லாம் நான் அலட்டிக் கொள்ளவில்லை. மனத்தில் கத்தியை இறக்கும் விதமாக அவதூறு பேசினார்கள்.

'பன்னிரண்டு மணிவரை கலெக்டர் அலுவலகத்திலிருந்துவிட்டு வந்தால் என்ன அர்த்தம்? கண்ட நேரத்திலும் அதிகாரிகளைச் சந்திக்கும் இவள் எப்படி ஒழுக்கமுடைய பெண்ணாக இருக்க முடியும்?' என்று கேட்டார்கள். உள்ளுக்குள் வருத்தமாக இருந்தாலும் நொறுங்கிப் போய்விடவில்லை. இதுபோன்ற விமர்சனங்களை மொத்தமாகப் புறக்கணிப்பது தான். பெண்ணின் வெற்றியைச் சகித்துக் கொள்ள முடியாமல் அவதூறு பரப்புகிற

வர்களுக்கு நாம் தரும் பதில்'' என்று தீர்க்கமாகப் பேசுகிறார் சல்மா.

"பின்னாட்களில் கணவர் என்னை முழுமையாகப் புரிந்துகொண்டது என் செயல்பாட்டில் மேலும் சுறுசுறுப்பைக் கூட்டியது'' என்கிறார். கேட்டுப்பெற மக்களுக்கு எவ்வளவு உரிமைகள் இருக்கின்றன என்பதை தமது கிராம மக்கள் தெரிந்துகொள்ளும்படிச் செய்ததோடு கடந்த ஐந்தாண்டுகளில் மட்டும் தம் மூகத்திலேயே அதிகபட்சமாக இரண்டரைக் கோடி ரூபாய் மதிப்பீட்டில் திட்டங்களை நிறைவேற்றியிருக்கிறார்.

இப்போது தி.மு.க.வின் சட்டமன்ற வேட்பாளராக மருங்காபுரி தொகுதியின் தேவைகளை எப்படி உணர்ந்திருக்கிறார்? "அடிப்படை வசதிகள் இல்லாத தொகுதியாகவே முடங்கிக் கிடக்கிறது மருங்காபுரி. கிராமங்களே நிறைந்த இங்கு மத்திய அரசு நிதிகளையும் திரட்டிவந்து முதலில் அடிப்படை வசதிக்கு ஆவன செய்வேன். விவசாயம் மட்டுமே உள்ள தொகுதிக்கு பெரிய தொழிற்சாலைகள் தேவை. அதற்குத் தொகுதி மக்களுக்குத் தொழிற்கல்வியும் தேவை. இரண்டையும் கொண்டு வரும் வரை ஓயப்போவதில்லை. முக்கியமாக கைவினைப் பொருட்கள் செய்யும் பெண்களுக்கு வீட்டிலேயே எலெக்ட்ரானிக் பொருட்கள் செய்ய பயிற்சி கொடுப்பது என் இலட்சியம்'' என்று வியக்கவைக்கிற சல்மாவுக்கு எழுத்து, பொது வாழ்க்கை இரண்டிலுமே திசைவழி தெரிந்துவிட்டது. இதைச் சுட்டிக் காட்டுவதுபோல 'திசை பழகுதல்' என்ற தலைப்பிலான அவரது கவிதையொன்று இப்படி முடிகிறது...

யாருடைய ஆட்காட்டி விரலையோ
பற்றியபடிதான்
திசைகளை வகுக்கிறோம்
திசைபழகிய பிறகு
தன் கைநழுவுமாவென்கிற
தாளவியலாத எளிய பதற்றத்தில்
சிர்குலைகின்றன
எல்லா உறவுகளும்..

- ஆர்.சி.ஜெயந்தன்

அட்டை, படங்கள் :
புதுவை இளவேனில்





• சீமான்

**பெரிய தலைவர்கள் நிச்சயம் வெற்றி பெறுவார்கள் என்று தெரிந்தே அவர்களை எதிர்த்துப் போட்டியிடு வார்கள் சிலர். இந்தத் தேர்தலிலும் அப்படி கருணாநிதி, ஜெயலலிதாவை எதிர்த்து நிற்கிறார்கள் தாவூத் மியாகானும் சீமானும்.**

இரண்டாவது முறையாக ஆண்டிப்பட்டியில் போட்டியிடும் ஜெயலலிதாவை எதிர்கொள்கிறார் சீமான். ஆண்டிப்பட்டிக்கு அடுத்திருக்கும் கம்பம் தான் இவரது ஊர். சென்னையில் 'சீமான் 100/100' என்ற பெயரில் டுடோரியல் நடத்தி பாப்புலராகி விட்டவர். "எனக்கு சீட்டு கொடுத்ததன் மூலம் ஒரு தொண்டனுக்கு மரியாதை செய்திருக்கிறார் கலைஞர்" என்கிறார் சீமான். தொகுதியில் வலம் வந்து கொண்டிருந்தவரிடம் பேசினோம்.

**எப்படி இந்த வாய்ப்புக் கிடைத்தது?**

"நான் தி.மு.கவில் சாதாரணத் தொண்டன். இதுவரை 12 முறை சீட்டு கேட்டேன். வாய்ப்புக் கிடைக்கவில்லை. நம்பிக்கையுடன் தொடர்ந்து முயன்றேன். இப்போது கிடைத்துவிட்டது."

**ஆண்டிப்பட்டிதான் நீங்கள் கேட்ட தொகுதியா?**

"இல்லை. நான் தியாகராயநகர் அல்லது கம்பம் தொகுதி கேட்டேன். நேர்காணலின்போது ஜெ. ஆட்சி ஒழிக்கப்பட வேண்டுமென்று நான் ஆவேசமாகப் பேசியது கண்டு தலைவர் இந்தத் தொகுதியைக் கொடுத்திருக்கிறார். மிக்க மகிழ்ச்சியோடும் நம்பிக்கையோடும் மக்களைச் சந்திக்கிறேன்."

**மதுரைப் பக்கம் தேர்தலில் நிற்கும் உங்களுக்கு அழகிரியின் ஒத்துழைப்பும் தேவைப்படுமே! அவரைச் சந்தித்தீர்களா?**

சேப்பாக்கம் தொகுதியில் மூன்றாவது முறையாகப் போட்டியிடும் கருணாநிதியை எதிர்த்து இந்திய யூனியன் முஸ்லிம் லீக் (தமிழ்நாடு) சார்பாக களத்தில் நிற்பவர், இஸ்லாமியர்களின் ஒப்பற்ற தலைவராக விளங்கிய காயிதே மில்லத் அவர்களின் பேரன் தாவூத் மியாகான். "கலைஞரும், காதர் மொய்தீனும் (வேலூர் பாராளுமன்ற உறுப்பினர்) பாரம்பரியமிக்க எங்கள் கட்சியை ஒழிக்கச் சதி செய்கிறார்கள். அதைத் தடுத்து நிறுத்தவே நான் போட்டியிடுகிறேன்" என்கிறார் மியாகான்.

**முஸ்லிம் அமைப்புகளில் யார் எந்த அணியில் நிற்கிறார்கள் என்பதே குழப்பமாக இருக்கிறதே!**

"இந்திய யூனியன் முஸ்லிம் லீக் (தமிழ்நாடு) மற்றும் இந்

# "பயமுறுத்தும் கடா!"

# "பாயும் புலி!"

"அவரைச் சந்திக்கச் சென்றேன். ஆனால் அவர் மிகவும் பிஸியாக இருந்ததால் சந்திக்க முடியவில்லை."

**ஜெ. ஆண்டிப்பட்டி தொகுதிக்குப் பல வளர்ச்சிப் பணிகளை நிறைவேற்றி தொகுதியை தக,தகவென்று வைத்திருக்கிறார் என்கிறார்களே!"**

"இந்தத் தகதகப்பு பத்திரிகைகளில் வேண்டுமானால் வெளிச்சம் போட்டுக் காட்டப்படலாம். ஆனால் உண்மையில் தொகுதியில் உள்ள மக்கள் அ.தி.மு.க பிரமுகர்களின் கருட்டலைப் பார்த்து வயிறெரிந்து போயிருக்கிறார்கள். முதலில் 40,000 வோட்டு வித்தியாசத்தில் வெற்றி

திய தேசிய லீக் ஆகிய கட்சிகள் அ.தி.மு.க அணியில் இணைந்து தேர்தலைச் சந்திக்கின்றன. தி.மு.க அணியில் இருக்கும் தமிழ்நாடு மாநில இந்திய முஸ்லிம் லீக் ஒரு கட்சியே அல்ல; அது ஒரு அமைப்பு. அதன் தலைவர் காதர் மொய்தீன் வேலூர் பாராளுமன்ற தொகுதியில் வெற்றிபெற வேண்டுமென்பதற்காக திமுக உறுப்பினராகவே மாறிவிட்டவர். அவருக்கு இந்திய யூனியன் முஸ்லிம் லீக் என்ற பெயரைப் பயன்படுத்திக்கொள்ள எந்தத் தகுதியும் கிடையாது.

தமிழ்நாட்டில் ஒட்டுமொத்த இஸ்லாமியர்களின் ஒரே நம்பிக்கையாக இருந்த இந்திய யூனியன் முஸ்லிம் லீக் சிதறுண்டு போனதற்கு, தேர்தலுக்குத் தேர்தல் அணி மாறியது மட்டுமல்லாமல் திராவிடக் கட்சிகளின் சின்னங்களில் போட்டியிட்டதும் ஒரு காரணம். இதில் கலைஞரின் பங்களிப்பு கணிசமானது. எனவே அவரது சதியை மக்களிடையே அம்பலப்படுத்தி, முறியடித்து, எங்கள் இந்திய யூனியன் முஸ்லிம் லீக் கட்சியைக் காப்பாற்றிக் கொள்ளவே களத்தில் நிற்கிறேன்."



**பொதுவாகவே இஸ்லாமியர்கள் பெரும்பாலோர் கருணாநிதி அபிமானிகள் என்ற பேச்சுண்டே....**

"அதெல்லாம் பழங்கதை. இவர் 1996 - 2001-ல் ஆட்சியில் இருந்தபோது எல்லா முஸ்லிம்களையும் தீவிரவாதி போலக் கருதி ஜெயிலில் தள்ளினார். இஸ்லாமியப் பெண்களும் போலீஸாரால் கொடுமைப்படுத்தப்பட்டனர். நான்குமுறை முதல்வராக இருந்தும் எங்கள் இடஒதுக்கீட்டிற்கு ஒன்றும் செய்யவில்லை. இப்போது ஏதோ அக்கறையுள்ளவர் போல நாடகமாடுகிறார். பா.ஜ.க ஆட்சிக்கு ஊதுகுழலாக இருந்தவர். இஸ்லாமியர்களைப் படுகொலை செய்த நரேந்திர மோடியைக் கண்டித்து பாராளுமன்றத்தில் தீர்மானம் கொண்டு வந்தபோது ஆதரிக்காதவர்."



**தீவிரவாதத்தை ஒடுக்கும் பணியில் பாதிக்கப்பட்ட அப்பாவி முஸ்லிம்களுக்காக களத்தில் நின்றதில் தமிழ்நாடு முஸ்லிம் முன்னேற்ற கழகத்துக்கு முக்கிய இடம் இருக்**

* தாவூத் மியாகான்



## "எனக்கு வைரமுத்து சிபாரிசு செய்யவில்லை!"

பெற்றார் ஜெ. ஆனால் பாராளுமன்ற தேர்தலில் ஆண்டிப்பட்டி தொகுதியில் எங்கள் வேட்பாளர் ஆருண் 12000 வோட்டுகள் அதிகமாக வாங்கினார். எனக்கு இந்தப் பகுதியில் சொந்தங்கள் அதிகம். இதுதவிர ஆதிதிராவிடர்கள், முக்குலத்தோர் என்று ஜாதி வித்தியாசம் பார்க்காமல் எனக்கு மக்கள் வோட்டுப் போடுவார்கள்."

**ஜெயலலிதாவுக்கு எதிராக நிற்க வைக்கப்பட்டு பலிகடா ஆக்கப்பட்டு விட்டீர்களா?**

"நான் பாயும் புலி; பலிகடா அல்ல."

**உங்களுக்கு சீட் கிடைக்கக் கவிஞர் வைரமுத்து சிபாரிசு என்கிறார்களே!**

"அவர் என் உறவினர். மற்ற படி அவர் எனக்கு சிபாரிசு செய்தாரா என்று தெரியாது."

தொகுப்பு: **ப்ரியன்**
படம்: **ராஜன்**

றது. ஆனால் அவர்கள் தி.மு.க அணியில்தானே இருக்கிறார்கள்?

"இதைப்பற்றி நீங்கள் அவர்களிடம்தான் கேட்க வேண்டும்."

**நரேந்திர மோடி பதவியேற்புக்குப் போய் வந்தாரே ஜெயலலிதா?**

"முதல்வரைப் பொறுத்தமட்டில் எல்லா சமூகத்தினரையும் சம தூரத்தில் வைத்து அணுகுகிறார். 1999-ல் பா.ஜ.க அரசு கவிழ முதல்வர்தான் காரணம். இப்போது எங்களுக்கு இடஒதுக்கீடு பற்றி முழுமையாக ஆராய நீதிபதி குமார் ராஜரத்தினம் தலைமையில் கமிட்டி போட்டுள்ளார்."

**கருணாநிதிக்கு எதிரான உங்கள் பிரசாரம் எப்படி இருக்கும்?**

"தொகுதியின் சட்டமன்ற உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட அவர், ஜனநாயகக் கடமையை நிறைவேற்றவில்லை. சட்டமன்றத்துக்கே செல்லவில்லை. அப்படிச் செல்லாதவரை மக்கள் நிராகரிக்க வேண்டும்."

**கட்சியைக் காப்பாற்றுவதே முக்கியம் என்கிறீர்கள். அப்படியிருக்க ஏதாவது கலபமான தொகுதியில் நின்றிருக்கலாமே! இப்போது பலிகடாவாக ஆகிவிட்டீர்களே!**

"பலிகடா அல்ல...நான் பயமுறுத்தும் கடா! முதல்வர் அவர்கள் என்னை எந்தத் தொகுதியில் வேண்டுமானாலும் நிற்கச் சொன்னார்கள். ஆனால் நான்தான் சேப்பாக்கத்தைத் தேர்ந்தெடுத்தேன். அதுவும் அ.தி.மு.க சின்னத்தில் போட்டியிடாமல் சுயேச்சை சின்னத்தில்தான் போட்டியிடப் போகிறேன். பெரிய தலைவர்கள்கூட தேர்தலில் சம்மட்டி அடி வாங்கியிருக்கிறார்கள். அந்த அடிப்படையில் கலைஞரை எதிர்த்து நானும் களத்தில் நிற்கிறேன்."

## "எல்லோரையும் சமதூரத்தில் வைத்துப் பார்க்கிறார் ஜெயலலிதா!"



* நரேந்திர மோடி

# சின்ன ஜோக்; பெரிய பரிசு!

# போட்டி முடிவு—12

## உயிரைக் கையில பிடிச்சிக்கிட்டு...

**ப்**பா... ஆட்டோவால பாதிக்கப்பட்டவங்க எவ்வளவு பேர்! அத்தனை பேரும் ஆட்டோ ஜோக் போட்டில கலந்துக்கிட்டாங்க போல... அவ்ளோ கார்டுங்க! சிறந்த 'ஆட்டோ ஜோக்' எழுதி தூத்துக்குடி மெட்டல்ஸ், சென்னை வழங்கும் 'சூர்யா கேஸ் ஸ்டவ்' பரிசா பெறும் வாசகர் ராம். ஆதிநாராயணன், தஞ்சாவூர்

''ஆட்டோவுல ஏறினதுலேர்ந்து வீடு வர்றவரைக்கும் கைய இறுக மூடியிருந்தீங்களே, ஏன் சார்?''

''உயிரைக் கையில பிடிச்சுக்கிட்டு வந்தேம்பா!''

• • •



பிரசுரத்துக்குத் தேர்வானவை...

''ஆர்சி புக் இல்லை. டிரைவிங் லைசென்ஸ் இல்லே... நீயெல்லாம் எதுக்கு ஆட்டோ ஓட்டறே...?''

''எல்லாம் உங்களுக்கு மாமூல் தரத்தான்!''

- வி. சித்ரா

• • •

''ஃபேமஸ் லாயர்கிட்டே ஜூனியரா சேர வந்திருக்கீங்க. முன் அனுபவம் இருக்கா?''

''ஆட்டோ டிரைவரா இருந்திருக்கேன்.''

''அதுக்கும் இதுக்கும் என்ன சம்பந்தம்?''

''சட்டத்தோட சந்து, பொந்துல எல்லாம் நுழைய உபயோகமா இருப்பேன் சார்.''

- எஸ்.அபிராமிஸ்ரீ

• • •

''ஏம்பா! ஆட்டோ பெட்ரோல்ல ஓடுதா இல்ல கேஸ்ல ஓடுதா?''

''நஷ்டத்துல ஓடுது சார்!''

- ஏ.முஹமது ஹுமாயூன்

• • •

''எதுக்கு திடீர்னு ஆட்டோவுல ஒரு ரவுண்டு போகணும்கறீங்க!''

''டாக்டர் கொடுத்த மருந்தை குலுக்காம சாப்பிட்டுத் தொலைச்சுட்டேன்!''

- ராம் ஆதிநாராயணன்



# அமரர் கல்கி நினைவுச்

**படைப்பாளிகளே,**
**வாசக எழுத்தாளர்களே!**
**நீங்கள் அனைவரும் ஆவலோடு**
**எதிர்பார்த்துக் கொண்டிருக்கும்**
**சிறுகதைப் போட்டி வந்தே விட்டது!**

## முதல் பரிசு – ரூ. 10,000
## இரண்டாம் பரிசு – ரூ. 7,500
## மூன்றாம் பரிசு – ரூ. 5,000

தவிர, பிரசுரத்துக்குத் தேர்வாகும் ஒவ்வொரு கதையும் ரூ. 500 சன்மானம் பெறும்.

யார் வேண்டுமானாலும் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் எழுதலாம் என்றாலும் எழுதுபவர் முப்பத்தைந்து வயதுக்குட்பட்டவராகவோ அல்லது அறிமுக எழுத்தாளராகவோ இருந்தால் சிறப்புப் பரிசு உண்டு. மற்ற நிபந்தனைகள் வழக்கமானவை.

விதிமுறைகள்:

- கல்கியில் 4 பக்கங்களுக்கு மிகாமல் இருப்பது நல்லது.
- சொந்தக் கற்பனைதான் என்பதற்கு உறுதிமொழிக் கடிதம் வேண்டும். அது இல்லாத கதைகள் பரிசீலிக்கப்பட மாட்டா.
- அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லையென்றும், போட்டி முடிவு வெளியாகும் வரை எழுதுவதில்லை என்றும் உறுதிமொழி தர வேண்டும்.
- படைப்பாளி முப்பத்தைந்து வயதுக்குட்பட்டவராக இருந்தால் அதற்கான

# சிறுகதைப் போட்டி 2006

ஏதாவதொரு அத்தாட்சி (பத்தாம் வகுப்பு டி.சி - ஜெராக்ஸ் போன்றவை) கண்டிப்பாக இணைக்கப்பட வேண்டும்.

● முழு வெள்ளைத்தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத வேண்டும்.

● தேர்வாகாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய தபால் தலைகள் ஒட்டிய அஞ்சல் உறை இணைக்கப்பட வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.

● போட்டிக்கு அனுப்பும் கதையை, முடிவுகள் வெளியாகும்வரை வேறு இதழுக்கோ, இணையதளத்துக்கோ, போட்டிக்கோ அனுப்பக்கூடாது.

● பரிசுக்குரிய கதைகளை நடுவர் குழு பரிசீலித்துத் தேர்ந்தெடுக்கும். சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.

● முடிவு வெளியாகும்வரை, எவ்வித கடிதப் போக்குவரத்தோ, தொலைபேசி விசாரிப்புகளோ கூடாது.

● 'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி - 2006' என்று உறையின் மேல் தவறாமல் குறிப்பிட்டு, அனுப்ப வேண்டிய முகவரி:

**ஆசிரியர்,**
**கல்கி,**
**கல்கி பில்டிங்ஸ்,**
**47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032**

● கதைகள் வந்து சேரக் கடைசித் தேதி: ஜூன் 15

● போட்டி முடிவும் முதல் பரிசுக்கதையும் ஆகஸ்ட் 6 ஆண்டு மலரில் வெளியாகும்.

படைப்பாளிகள், வாசக எழுத்தாளர்கள் அனைவரும் உற்சாகத்துடன் கலந்துகொண்டு சிறப்பிக்க அழைக்கிறோம்.

- ஆசிரியர்





# கல்கி




2006 ஏப்ரல் 16
விய சித்திரை 3
மலர் : 64
இதழ் : 37


தமிழ்த்திரு
நாடுதன்னைப்
பெற்ற தாயென்று
கும்பிடடி பாப்பா
- பாரதியார்

## சீருடையில் படிந்த அரசியல் சாயம்!

காவல் துறை கமிஷனர் நடராஜ் பணி மாற்றம் தொடர்பான வழக்கில் தேர்தல் கமிஷன் தோற்றது; தமிழக அரசு ஜெயித்தது என்று சட்ட ரீதியாக வேண்டுமானால் சொல்லலாம். ஆனால், உயர்நீதிமன்ற தீர்ப்பு அரசுக்கோ கமிஷனருக்கோ பெருமை சேர்ப்பதாக இல்லை.

நீதிமன்றங்கள் சட்டத்தின் அடிப்படையில்தான் தீர்ப்பு கூற முடியுமேயொழிய, அவற்றைக் கடந்த தார்மிக நெறிகளை வலியுறுத்தவோ நடைமுறைப்படுத்தவோ அவற்றால் முடியாது. இந்த நெறிகளை, தலைவர்களும் முன்னோடிகளாகக் கருதப்படும் பெரியோர்களும் கடைப்பிடிக்க வேண்டும்; குறிப்பாக மக்கள் சேவையில் ஈடுபட்டு உயர்பதவி வகிக்கும் காவல் துறையினர் போன்றோர் நல்ல மரபுகளையும் தார்மிக நெறிகளையும் கட்டிக் காக்க வேண்டும்.

இதைத்தான் சென்னை உயர்நீதி மன்றம் சுட்டிக் காட்டியிருக்கிறது:

"தேர்தல் தேதி அறிவிப்புக்கும் தேர்தல் அட்டவணை அறிவிப்புக்கும் வேறுபாடு இருக்கிறது. தேர்தல் அட்டவணை அறிவிக்கப்படுகிற வரையில் அரசு அதிகாரிகள் பணி மாற்றத்தில் தேர்தல் கமிஷன் தலையிட முடியாது. ஆகவே, கமிஷனர் நடராஜைப் பணிமாற்றம் செய்யும்படி அரசை வற்புறுத்தலாம்; ஆனால் கட்டாயப்படுத்த தேர்தல் கமிஷனுக்கு அதிகாரம் இல்லை" என்பது தீர்ப்பு.

இதே தீர்ப்பில் தேர்தல் கமிஷனை இலேசாகக் குட்டியிருக்கிறது உயர்நீதிமன்றம். 'அரசுடன் நேரடி மோதல்களைத்




தவிர்த்து, நல்லதனமாகப் பேசி, நன்னடத்தைகளை அமல்படுத்தலாமே' என்று யோசனை கூறியிருக்கிறது!

அதேசமயம், கமிஷனர் நடராஜ் பத்திரிகை பேட்டியில் வரம்பு மீறி பேசிவிட்டார்; அவர் இன்னும் கவனமாகவும் ஆழ்ந்து சிந்தித்தும் செயல்பட்டிருக்க வேண்டும் என்பதையும் உயர்நீதிமன்றம் அழுத்தம் திருத்தமாகச் சுட்டிக் காட்டியிருக்கிறது.

தேர்தல் பின்னணியை நீக்கிவிட்டுப் பார்க்கும்போதுகூட, ஓர் அரசு அதிகாரி, அதிலும் காவல்துறை உயர் அதிகாரி, ஆட்சிப் பொறுப்பில் இருப்பவரை வானளாவ புகழ்வதும் துதிபாடுவதும் ரசனைக் குறைவானது மட்டுமல்ல; தார்மிக அடிப்படையில் தவறும் ஆகும். தனிப்பட்ட விருப்பு - வெறுப்புகள், அபிப்பிராயங்கள் போன்றவற்றைக் கடந்து, மக்கள் நலனுக்காக மட்டுமே இயங்க வேண்டும் காவல்துறை. முதல்வரைப் பாராட்டி பேட்டி கொடுக்கும்போது, கமிஷனருக்கு இருக்க வேண்டிய நடுநிலைமை பிறழ்ந்து போகிறது. அவரது சீருடையில் அரசியல் சாயம் படிகிறது.

இதுபோன்ற நிகழ்வுகளை மிகச் சுலபமாகத் தவிர்க்க முதல்வரே முற்பட வேண்டும். தம்மைப் புகழ்வோர், துதிபாடுவோரை அவர் கண்டனம் செய்ய வேண்டும். அத்தகைய துதிகளை அவர் அனுமதிக்கவே கூடாது. ஆனால், ஜெயலலிதா ஆட்சியில் சட்டசபையிலேயே இந்தத் துதியும் போற்றியும் நிகழ்ந்து வந்துள்ளன. கட்சி அரசியலுக்கு அப்பாற்பட்டு இயங்க வேண்டிய சபாநாயகரேகூட துதிபாடலில் ஈடுபட்டிருக்கிறார்.

இதே பாதையைப் பின்பற்றி கமிஷனர் செல்கிறபோது, காவல்துறையின் நடுநிலைமை குறித்த நம்பிக்கை தகர்ந்து போகிறது.

தேர்தல் கமிஷன், நடராஜின் மரபு மீறலைச் சுட்டிக் காட்டியதுமே அவர் ராஜினாமா செய்திருக்க வேண்டும். ஆனால், அவர் அதைச் செய்யவில்லை. அரசும் அவர் ராஜினா மாவைக் கோருவதற்குப் பதில் அவருக்கு வக்காலத்து வாங்கி வழக்கு தொடர்ந்தது. இப்போது நீதிமன்றம் நடராஜுக்குக் கண்டனம் தெரிவித்துள்ளது. அதையும் அவர் பொருட்படுத்தாமல் பணியில் தொடர்கிறார்.

தர்மம், நல்மரபுகள் என்ற களைகளை வீசி எறிந்துவிட்டு, சட்டம் என்ற தோலை மட்டும் தின்பதில் என்ன பெருமை இருக்கிறது!? ○

# 1

இந்த உலகத்தில் எதற்கும் ஒரு அளவும், நியமமும் உண்டு. மனித வாழ்க்கை அதற்குத் தகுந்தாற்போல அமைய வேண்டும். இயற்கையில் படைக்கப்பட்டுள்ள ஒவ்வொன்றுக்கும் ஒரு இயல்பு உண்டு. அதை அறிந்து மனிதன் வாழ வேண்டும். இறைவன் மனிதர்களது வாழ்க்கை சௌகர்யமாக அமைய வேண்டும் என்பதற்காக பல்வேறு ஆற்றல்களை அளித்திருப்பதுடன் விவேக புத்தியையும் அளித்திருக்கிறான். அவற்றையெல்லாம் மனிதன் பயன்படுத்திக்கொள்ளலாமே தவிர சுகத்தைத் தேடி அவற்றின் பின்னாலேயே போய்க்கொண்டு இருந்துவிட்டால், வாழ்க்கையில் நிஜமான சுகமும் நிம்மதியும் கிடைக்காது. துன்பம் என்ற குட்டைக்குள்ளேயே உழன்று கொண்டிருக்க வேண்டியதுதான்.

அம்மா ஒரு கதை சொல்லட்டுமா?

ஒரு மனிதன் தீர்த்த யாத்திரை புறப்பட்டான். தன்னந்தனியாக பல நாட்கள் பயணம் செய்தபின் ஒரு நாட்டை அடைந்தான். அந்த நாட்டுக்கு அவன் இதற்கு முன்னால் சென்றது கிடையாது. புதிய நாடு; புதிய மனிதர்கள்; புதிய மொழி; புதிய பழக்க வழக்கங்கள்; சாப்பாடு கூட அவனுக்குப் பரிச்சயமில்லாததுதான். இருந்தாலும், யாத்திரை புறப்பட்ட பிறகு இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருக்க முடியுமா? சுற்றிலும் நடப்பவற்றையெல்லாம் உற்றுப் பார்த்துக்கொண்டே நடந்து கொண்டிருந்தான்.

ஓர் இடத்தில் நிறைய பேர் கூட்டமாக நின்றுகொண்டிருந்தார்கள். அங்கே என்ன நடக்கிறது என்று தெரிந்துகொள்ள அவனுக்கு ஆர்வம் ஏற்பட்டது. அருகில் போய்ப் பார்த்தான். அது ஒரு கடை. அங்கே பல தரப்பட்ட பொருள்களும் விற்பனையாகிக் கொண்டிருந்தன. கடையின் ஒரு பகுதியில் பழங்கள் இருந்தன. விதம் விதமான பழங்கள், ஒவ்வொன்றும் ஒரு சைஸ், ஒவ்வொன்றும் ஒரு நிறம். அவற்றில் பலவற்றை அவன் அதற்கு முன்னால் பார்த்ததே கிடையாது.

பழங்களைப் பார்த்ததும் அவனுக்கு இலேசாகப் பசி எடுத்தது. எந்தப் பழத்தை வாங்குவது என்று கொஞ்ச நேரம் யோசித்துக் கொண்டிருந்தான். எல்லாப் பழங்களையும் சிறிது நேரம் பார்த்துக்கொண்டே இருந்தான். அவனுக்குப் பக்கத்தில் நின்றுகொண்டு இருந்தவர் செக்கச் சிவந்த பழங்களை வாங்கினார். ''ஆஹா! இந்தப் பழம் எவ்வளவு சிவப்பாக உள்ளது! நன்றாகப் பழுத்ததுபோல இருக்கிறது. நாமும் இதையே வாங்கிச் சாப்பிடலாம்'' என்று முடிவு செய்தான். அந்தச் சிவப்பு பழங்களையே, தான் சாப்பிடுவதற்காக வாங்கிக்கொண்டான்.

வெகு நேரம் நடந்து வந்த களைப்பு. கால்கள் ஓய்வுக்காக கெஞ்சின. அரு



கில் இருந்த ஒரு மரத்தின் அடியில் போய் உட்கார்ந்துகொண்டான். தனது பையைத் திறந்து கடையில் வாங்கிய சிவப்பு நிறப் பழம் ஒன்றை எடுத்தான். வாயில் வைத்து நுனியில் கொஞ்சம் கடித்தான். சுர்ரென்று காரம். பழத்தைத் திருப்பி மறுபக்கத்தில் கொஞ்சம் கடித்தான். அப்போதும் காரம் உறைத்தது. அந்தப் பழத்தை எறிந்துவிட்டு, வேறு ஒரு பழத்தை எடுத்துக் கடித்தான். அதுவும் காரமாகவே இருந்தது. அதையும் எறிந்துவிட்டு இன்னொரு பழத்தை எடுத்துக் கடித்தான். சே! காரம்தான்! நல்ல இனிப்புள்ள பழம் ஒன்றாவது இருக்காதா என்ற நம்பிக்கையில் இருந்த எல்லா பழங்களையும் எடுத்துக் கடித்துப் பார்த்தான். காரம்! காரம்! காரம்தான்!

சிவப்புப் பழங்களின் காரம் நாக்கில் எரிச்சலூட்டியது. தாங்க முடியாத காரம் அவனது கண்களில் கண்ணீரை வரவழைத்தது. 'ஐயோ! கடவுளே! என் பசியைப் போக்க வாங்கின பழம்

# அன்பெனும் மழையிலே...

## மாதா அமிர்தானந்தமயி



பறயகடவு. கேரள மாநிலம் கொல்லம் மாவட்டத்தில் உள்ள சின்ன கிராமம். அந்தக் கிராமத்தில் வசித்த இடமண்ணேல் குடும்பத்தைச் சேர்ந்தவர் சுகுணானந்தர். அவரது மனைவி தமயந்தி. கடவுள் பக்தி மிகுந்த அந்தத் தம்பதிக்கு ஒன்பது குழந்தைகள் பிறந்தன. ஒரு குழந்தை பிறந்த இரண்டு மாதங்களிலேயே இறந்துவிட்டது. மற்ற எட்டு குழந்தைகளில் நான்கு பெண்கள். நான்கு பிள்ளைகள். இவர்களில் நான்காவதாகப் பிறந்த பெண் குழந்தையின் பெயர் சுதாமணி.

1953-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 27- ம் தேதி பிறந்த சுதாமணிதான் இன்று உலகமெங்கும் பக்தர்களால் அம்மா என்று அன்புடன் வணங்கப்படும் மாதா அமிர்தானந்தமயி.

சுதாமணி பிறந்த போதே, கைவிரல்கள் சின்முத்திரை தாங்கி இருந்ததாக அவரது பெற்றோர்கள் கூறினார்கள்.

- மௌனி



# அம்மா!

பசியையும் போக்கவில்லை! மாறாக எரிச்சலையல்லவா கொடுத்திருக்கிறது! இது என்ன சோதனை?' என்று நொந்து கொண்டான்.

பாவம் அவன். இனிப்பான பழம் என்று நினைத்து அவன் வாங்கியது என்ன தெரியுமா? நல்ல பழுத்த மிளகாய்!

ஒன்றிரண்டு மிளகாய்களைக் கடித்தவுடன், 'ஓ! இது இனிப்பான பழம் இல்லை!' என்பதைப் புரிந்துகொண்டு அவற்றைத் தூக்கியெறிந்து விட்டு பசியாற்றிக் கொள்ள வேறு நல்ல பழங்களை வாங்கிச் சாப்பிட்டிருக்கலாம். பசியடங்கி இருக்கும். காரத்தால் அவதிப்படாமலும் இருந்திருக்கலாம். ஆனால் இனிப்புள்ளது கிடைக்கும் என்ற ஆசையில் கடைசி மிளகாய் வரை கடித்துக் கொண்டே இருந்தான். மிளகாயின் குணம் காரம். அது தன் குணத்தைக் காட்டிவிட்டது.

பார்க்க அழகாக இருந்ததால், அதன் சுவையும் இனிப்பாக இருக்கும் என்று அவன் தவறாக நினைத்துக்கொண்டு விட்டான். உலகில் ஏறத்தாழ அனைவருமே அந்த மனிதன் செய்த தவறைத் தான் வாழ்நாள் முழுவதும் செய்து கொண்டிருக்கிறார்கள். சுகம் அளிப்பதையே தனது இயல்பாகக் கொள்ளாத பொருள்களில் மனிதர்கள் சுகத்தைத் தேடிக் கொண்டு இருக்கிறார்கள். சுகத்தைத் தேடி ஒரு பொருளிலிருந்து இன்னொரு பொருளை நாடிச் செல்கிறோம்.

சுகம் என்பது வெளியிலுள்ள பொருள்களிலிருந்துதான் கிடைக்கும் என்பது மனிதனின் மயக்கமாகும். சுகம் என்பது வெளியிலுள்ள பொருட்கள் எதிலுமில்லை. உண்மையான ஆனந்தம் நம் உள்ளேயே இருக்கிறது. இதைப் புரிந்து கொண்டு, ஆனந்தத்தின் அந்த உண்மையான உறைவிடத்தைத் தேடவே இறைவன் நமக்கு உடலையும் உணர்வுகளையும் பகுத்தறிவையும் கொடுத்திருக்கிறார். உணர்வுகளை விவேகமில்லாமல் பயன்படுத்தினால், எதிர்பார்த்த சுகத்துக்கு மாறாக துன்பமே விளையும்.

புலனின்பங்களின் இயல்பு துன்பம் அல்லது மாயையான இன்பம். இதை அறிந்துகொள்ளாமல் அவற்றின் பின்னால் சென்றால், அதன் பலனாகத் துன்பங்களை அனுபவித்துதான் ஆக வேண்டும்.

(அன்பு பெருகும்)

ஸ்ரீராம நவமி
சிறப்புச் சலுகை!

# மகாபாரதம்

அல்லது

# குருக்ஷேத்திரம்

## உரைநடையில்

பேராசிரியர் ஜெ. ஸ்ரீசந்திரன்

**பக்கம் : 564 விலை ரூ. 200**

மிக நீண்டு பரந்து செல்லும் பாரதத்தின் முழுக் கதையையும் மிகச் சுருக்கமாகக் கூறும் இந்நூலில் பதினெட்டுப் பருவங்களும் உண்டு.

'தங்கள் முன்னிலையில் நான் உபதேசம் செய்வது தகுமா?' எனப் பீஷ்மர், கண்ணபிரானைப் பார்த்து வினவினார். அப்போது 'உமது உபதேச மொழிகள் உலகில் வேதப்பொருளாக நிலை பெறப் போகின்றன! குறையொன்றும் இல்லாத கொற்றவன் நீ! உம் பெருமையை உலகம் நன்கு உணர வேண்டும்; ஆதலால் நீரே அற உரைகளை வழங்குக! அதற்கேற்ற வல்லமையை நான் தருகிறேன்!' எனப் பகவான் திருவாய் மலர்ந்தருளினார். அதன் பின்னர் பிதாமகர் அடுக்கடுக்காக நல்லறக் கருத்துக்களை எடுத்துரைத்தார். கண்ணபிரானின் வேண்டுகோளை ஏற்று, பீஷ்மர் நல்லுபதேசங்களை வழங்கினாரே, அவற்றை நினைவுபடுத்தவே குருக்ஷேத்திரம் என்னும் சொல் தலைப்பில் இடம் பெற்றுள்ளது!

பீஷ்மர் இல்லையென்றால் மகாபாரதம் இல்லை! அப்பெருமகன் இல்லையென்றால் உலகம் ஓர் ஒப்பற்ற இதிகாசத்தை இழந்திருக்கும்.

பகவத் கீதைக்கு இணையான பீஷ்மரின் அருளுரைகள் நீதிகளும் கிளைக்கதைகளுமாக ஒரு நாவலைப்போல் அமைந்துள்ளது இந்நூல்!

நேரில் பெற

* சென்னை : வர்த்தமானன் ✆ : 24364174 / 55666727
* கோவை : விஜயா பதிப்பகம் ✆ : 2382614 / 2394614
* சேலம் : சந்திரா ✆ : 2265635
* திருச்சி : திருச்சி புக் ஹவுஸ் ✆ : 2764198 / 2766815
* மதுரை : செல்வி ✆ : 5380169 / 2343510
* நெல்லை : அருள் நந்தி சிவம் ✆ : 2339692 / 2338443
* திருவண்ணாமலை : ஸ்ரீ அருணா வரதன் ✆ : 250272 / 254600
* காஞ்சிபுரம் : குரு ✆ : 27260256
* விழுப்புரம் : கீதா ✆ : 225183 / 9865754879
* புதுக்கோட்டை : எஸ்.பி.எம். ✆ : 230035 / 9443531950
* தஞ்சாவூர் : அன்னம் ✆ : 279288 / 9443159371
* தருமபுரி : சதீஷ் ✆ : 268112



இரு காப்பியங்களையும்
நாவல் படிப்பதுபோல
ஒரே மூச்சில் படித்து முடிக்கலாம்!

# கம்பராமாயணம்

## உரைநடையில்

முனைவர் அ. அறிவொளி

**பக்கம் : 912 விலை ரூ. 225**

* கம்பராமாயண காப்பியக் கதையை 912 பக்கங்களில் விரிவாகக் கூறியுள்ளார் ஆசிரியர்.
* இந்நூலில் 112 தலைப்புகளில் காப்பியத்தில் உள்ள பல முக்கியமான நிகழ்ச்சிகள் அனைத்தையும் இதில் காணலாம்.
* கம்பராமாயணத்தில் காணப்படும் சுவையான பாடல்கள் அனைத்தையும் கதைப்போக்கில் பொருத்தமான இடங்களில் பார்க்கலாம்.
* கதையில் வரும் மாந்தர்கள் துடிப்புடன் செயல்படுகிறார்கள். அண்ணனுக்குப் பணிவிடை செய்வதில் நிகரற்று விளங்கும் இலக்குவன், அண்ணன் சொல்லைச் சட்டமாக ஏற்றுப் செயல்படும் பரதன், தாயன்பே உருவான கோசலை, ஞானியான சுமித்திரை, செருக்கு வாய்ந்த கைகேயி, மரபுக்கும் வாய்மைக்கும் இடையே கட்டுண்டு துடிதுடித்து இறக்கும் தயரதன், அளப்பரும் ஆற்றல் பெற்ற அனுமன், அறத்தின் நாயகரான இராமரைச் சார்ந்த வீடணன், அண்ணன் என்ற பாசத்துக்குக் கட்டுப்பட்டு உயிர் துறந்த கும்பகருணன் ஆகிய எண்ணற்ற மாந்தர்களை மறக்கவொண்ணா வகையில் விவரித்துச் சொல்கிறார் ஆசிரியர்.

45 ஆண்டுகளாகக் கம்பனில் அனுபவம் பெற்றவரின் சீரிய படைப்பு இது.

**இரண்டு நூல்களும் சேர்ந்து**
**சிறப்புச் சலுகை விலையில்**
**ரூ. 225 மட்டுமே!**

தபாலில் பெற கடிதம் எழுதுக.
நூல்களை வி.பி.பி.யில் அனுப்புகிறோம்.
சிறப்புச் சலுகை விலை ரூ. 225 மற்றும்
தபால் செலவு ரூ. 40 சேர்த்து ரூ. 265 மட்டும்
தபால்காரரிடம் கொடுத்து நூலினைப் பெறலாம்.

கடிதம் எழுத வேண்டிய முகவரி
**வர்த்தமானன் பதிப்பகம்**
40, சரோஜினி தெரு, தியாகராய நகர், சென்னை 17.

**இச்சலுகை 29.4.2006**
**வரை மட்டுமே!**

# அப்பாவின் நிம்மதி!

அப்பா கடிதம் போட்டிருக்கிறார். அச்சடித்த மாதிரி, மணி மணியான அந்த எழுத்துகளைப் பார்த்ததுமே கண்கள் பொங்கிவிட்டன. அண்ணன், நான், தம்பி மூன்று பிள்ளைகள். சிறுவயதில் தாயை இழந்த குறை தெரியாமல் வளர்த்தார். மளிகைக் கடையில் கணக்கெழுதி, பொட்டலம் மடித்து, சொற்ப சம்பளத்தில் குறை தெரியாமல் எங்களை வளர்த்தார். ஒரே பெண் என்று எனக்கு செல்லம்.

நாங்களும் நன்றாய்ப் படித்தோம். நல்ல வேலை கிடைத்தது. யார் யாரையோ பிடித்து உதவி கேட்டு அப்பா பணம் புரட்டியதால்தான் எல்லாம் நடந்தது. மறுக்கவோ, மறைக்கவோ முடியாது. படிப்பும், வேலையும் அண்ணன், தம்பி இருவருக்கும் பெரிய இடத்துப் பெண்களைக் கொண்டு வந்தது. நான் என் ஆபீசில் வேலை பார்த்த சுகுமாரை விரும்பினேன். அப்பா சந்தோஷமாய் முடித்து வைத்தார். அப்பாவை உடன் வைத்துக் கொள்ள மூன்று பேரும் போட்டி போட்டோம். மூத்தவன் என்கிற உரிமையில் அண்ணன் தன்னோடு அழைத்துப் போனான். அன்றுதான் தொடங்கியது பிரச்னை. அப்பா, அண்ணன் பிள்ளைகள் முன்பு வைத்தே அவனை விரட்டினார். மருமகளை அதிகாரம் செய்தார். சம்பந்தியை சண்டை போட்டு வரவிடாமல் செய்தார். அண்ணன் பொறுக்கமுடியாமல் எனக்கும், தம்பிக்கும் போன் செய்தான். அண்ணனிடம் கோபித்துக் கொண்டு தம்பி வீட்டுக்குப் போனார். ஒரே மாதம்தான். அங்கிருந்து என் வீட்டுக்கு வந்துவிட்டார். அப்பாவைச் சமாளிக்க நான் தயாராக இருந்தேன். "உன் வீட்டிலும் ஒரு மாதம்தான். பாரேன்" அண்ணனும், தம்பியும் ஒரே குரலில் சொன்னார்கள். பாவம் வயசானவர். நாம்தான் அட்ஜஸ்ட் பண்ணிப் போகணும். சுகுமாரும் தன் பங்குக்குத் தயாரானார். முதல் பத்து நாள் நல்லபடியாகக் கழிந்தது.

"என்ன லலிதா, இந்த வேலைக்காரி பொன்னம்மா பத்து மணிக்கு வர்றா. பாத்திரங்களை அரைகுறையா கழுவறா. அவ என்ன செஞ்சாலும் நீ கண்டுக்கறதே இல்லியே. ஒவ்வொரு சமயம் யார் எஜமானிங்கறதே புரியலை" என்றார் ஒரு நாள்.

நான் அமைதியாய் இருக்கவே, முணுமுணுத்தபடியே எழுந்து போய் விட்டார். மறுநாள் பொன்னம்மா வேகமாக வந்தாள்.

''அம்மா, பெரியவரு ரோதனை பெரிசா இருக்கு. கம்முனு இருக்கச் சொல்லுங்க. உங்க முகத்துக்காகப் பாக்கறேன்" என்றாள். ஒரு வாரத்தில் போயே விட்டாள். எல்லா வேலையும் என் தலையில் விழுந்தது.

இன்னொரு நாள் ஆபீசிலிருக்கும் போது அப்பா போன் செய்தார், "லலிதா உடனே வாயேன். பக்கத்து வீட்டுக்காரன் ரொம்ப வம்பு பண்ணுகிறான். போலீசுக்கு போன் பண்ணப் போறானாம்."

உடனே கிளம்பிவிட்டேன். அவசர மீட்டிங் வேறு. பக்கத்து வீட்டுக்காரர் ரொம்ப நல்ல மாதிரி. ரிடையர்ட் ஜட்ஜ். அவருடன் அப்பாவுக்கு என்ன பிரச்னை?

"பாரேன். அவங்க வீட்டு வேப்பமரம் கிளை முழுசும் நம் வீட்டு காம்பவுண்டுக்குள். வேப்பம் பழம் உள்ளே விழுது. அதைப் பொறுக்க சின்னப்பசங்க சுவர் ஏறிக் குதிக்கிறாங்க. இலைக்குப்பை வேற. கிளையை வெட்டச் சொன்னேன். முடியாதுங்கறான். நானே வெட்டிடறேன்னு அரிவாளோட வந்தா போலீசுக்குச் சொல்றேங்கறான். கிழவனுக்குத் திமிரைப் பாரேன்.'' அப்பா படபடத்தார். சுகுமாரும் அவசரமாய் வந்து இறங்கினார். ஒரு வழியாய் ஜட்ஜை சமாளித்து அப்பாவை கூல் பண்ணி.. வெறுத்துவிட்டது. நல்ல வேளை. சுகுமார் ஒன்றும் சொல்லவில்லை. எனக்குத்தான் ஒரு மாதிரி இருந்தது.

சுகுமார் ஆபீசிலிருந்து வந்து ஏழு மணிக்கெல்லாம் டி.வி. முன்னால்

உட்கார்ந்து விடுவார். ஆங்கிலப் படமாய் பார்ப்பார். பன்னிரண்டு மணிக்குத்தான் படுப்பார். இந்த அப்பா இப்போதெல்லாம் டி.வி.யை ஆக்கிரமித்துக் கொள்கிறார். உலகை மறந்து பழைய பாடல்களில் ஐக்கியமாகிவிடுகிறார். சுகுமார் திணறுவதைப் பார்க்க பாவமாக இருக்கிறது. எத்தனை நேரம்தான் சிகரெட் பிடிப்பார்? நட்சத்திரங்களை எண்ணுவார்? கோபத்தில் இன்னொரு டி.வி.கூட வாங்கிவிடுவார். சாடைமாடையாய்ச் சொல்லியும் அப்பா கண்டு கொள்ளவேயில்லை. சுகுமார் ஆபீசிலிருந்து நண்பர்கள் வருவார்கள். பேசிக்கொண்டே இருப்பார்கள். நான் கூட ஒரு சில வார்த்தைகள் பேசிவிட்டு ஒதுங்கிவிடுவேன். இந்த அப்பா அநியாயம். திறந்த மார்பும், தோளில் சின்ன டவலுமாய் அவர்களுக்கிடையே போய் உட்கார்ந்து விடுவார். வாய் மூடாமல் வேடிக்கை பார்ப்பார். "உங்கள் வீட்டுக்கா?" என்று ஒருத்தர் கேட்டுவிட, சுகுமார் அவரைக் கண்டிக்காமல் விட அப்பாவுக்கு வந்ததே கோபம். "மாமா. நீங்க உங்க இடத்தில் இருந்தா இப்படி எல்லாம் பேச்சு கேட்க வேண்டியிருக்குமா?" சுகுமார் பதிலுக்குக் கேட்டுவிட்டார்.

"பாரும்மா. கிழவனுக்குப் போக்கிடம் இல்லைன்னுதானே இப்படிப் பேசறார் மாப்பிள்ளை. நான் போறேன் ஊருக்கு" விருட்டென்று கிளம்பிவிட்டார் அப்பா, நானும் வற்புறுத்தி இருக்கச் சொல்லவில்லை. அதன்பின் அண்ணனுக்கும், தம்பிக்கும் கடிதம் போடும் அப்பா எனக்கு மட்டும் எழுதவே மாட்டார். இரண்டு மாதங்களுக்குப் பின் ராசியாகிவிட்டோம். மூன்று பேருமே மாதா மாதம் அவருக்குப் பணம் அனுப்பத் தவறுவதில்லை. ஆனால் தங்களுடன் வந்து இருக்

அருள்மொழிவர்மன்

கும்படி மூன்று பேரும் சொல்லவில்லை என்ற குறை அப்பாவுக்கு இருந்திருக்க வேண்டும். தனிமையின் கொடுமை பற்றி, நிம்மதி இல்லாதது பற்றி அவ்வப்போது எழுதுவார். ஆபீசுக்கு லீவு போட்டுவிட்டு பத்து நாளாவது அவருடன் இருந்துவிட்டு வரவேண்டும் என்று நினைப்பதுண்டு. வேலைப்பளுவால் முடியவில்லை. அவர் கடிதத்துக்காவது பதில் எழுத நினைப்பேன். நாட்கள் ஓடிவிட்டன. திடீரென்று அண்ணன் போன் செய்தான். அப்பா கீழே விழுந்து விட்டாராம். நடக்க முடியவில்லையாம். மூன்று பேரும் போய் பார்த்துவிட்டு வருவோமோ என்றான். "அதற்கென்ன? என் வீட்டுக்கு வா. தம்பியும் வரட்டும். போவோம்" என்றேன்.

ரயிலில் போகும்போதே பலவிதமாய்க் கவலைகள். "லலிதா, அப்பா வயசானவர். அநேகமாய் இடுப்பு எலும்பு பிசகி இருக்கும். ஆஸ்பத்திரியில் பத்து நாள் இருக்க வேண்டி இருந்தால் என்ன செய்வது?" அண்ணன் கேட்டான்.

"எனக்கு புதுவீட்டு வேலை நடக்குது. அடுத்த மாசம் குடி போகணும். அதுக்குள்ளே வேலையை முடிக்கணும். உன் அண்ணிக்கு வர முடியாது" அவனே பதிலும் சொல்லிக் கொண்டான்.

தம்பி உடனே, "எனக்கு அடுத்த வாரம் ஒரு எக்ஸாம் இருக்கு. பாஸ் பண்ணினா பிரமோஷன் கிடைக்கும். அவளுக்கும் வர வசதிப்படாது. என்ன செய்யலாம்?" என்றான்.

"சுகுமார் சின்னக் குழந்தை மாதிரி. அவருக்கு நான் இல்லாம எதுவும் ஓடாது. அடிக்கடி ஆபீஸ் மீட்டிங் வேற இருக்கும். பொறுப்பு அதிகம். லீவும் எடுக்க முடியாது."

நானும் என் பங்குக்குச் சொல்லி வைத்தேன்.

"ஒரு நர்ஸ் வைச்சிடலாம். எவ்வளவு சம்பளம் கேட்டாலும் கொடுத்து விடுவோம்."

"வீட்டில் தனியா இருப்பாரா?"

"கவனிக்க ஆள் வேணுமே? நல்ல பெண்ணா கிடைக்கணும். இவர் குணத்துக்கு ஒத்துப் போகணுமே"

"மெஸ் சாப்பாடு அவருக்குப் பிடிக்கணும். அது வேற."

"மாதா மாதம் லீவு எடுத்துக்கொண்டு நமக்கு வர முடியுமா?"

"அவரை முதியோர் இல்லத்தில் சேர்த்து விடலாமே."

"அதுதான் நல்ல யோசனை." அப்படித்தான் முடிவு செய்தோம்.

'அவரிடம் யார் சொல்வது? நான் உங்களுக்குச் சுமையாகிவிட்டேனோ என்று கேட்டால் என்ன பதில் சொல்வது?'

இரண்டு பேரும் அதை என் பொறுப்பில் தள்ளிவிட்டார்கள். தயங்கியபடியே ஆட்டோவில் போனோம். அப்பா வீட்டு வாசலில் நாலு பேர்.

"அடடா. மூன்று பிள்ளைகளையும் பார்க்கக் கொடுத்து வைக்காமல் போய்ச் சேர்ந்துட்டாரே" என்கிறார்கள்.

"ஐந்து நிமிடம் முன்னதாக வந்திருந்தால் அப்பாவை உயிரோடு பார்த்திருக்கலாமே. கொடுத்து வைச்சது அவ்வளவு தான்."

இனம் புரியாத உணர்வு பரவ மூவரும் மௌனமாக நின்றோம். தப்பான நிம்மதிதான் அது என்பது புரியத்தான் செய்தது. ●



"ஒரு புடைவை எடுத்தா அஞ்சு புடைவைகள் இலவசம்னு நோட்டீஸ் கொடுத்ததை நம்பி ஏமாந்துட்டியா... எப்படி?"

"அஞ்சு நிமிஷத்துல செலக்ட் பண்றவங்களுக்குத்தான் அந்த சலுகையாம்."

- விஜயமாறன்

# "வாழ்ந்தா நாயர் மாதிரி வாழணும்!"

"இந்த டீக்கடைக்கு வயசு நாற்பத்து நாலு சார்... எங்க அப்பா ராமன்குட்டி தன்னோட இருபத்தாறு வயசுல இந்த காட்டூர் கிராமத்துல கால் பதிச்சு ஆரம்பிச்ச கடை இது. 'வாழ்ந்தா நாயர் மாதிரி வாழணும்டா'ன்னு இன்னிக்கும் இந்தக் கிராமத்துல சொல்வாங்க. அதுக்குக் காரணம் அப்பாவோட கல்யாணம்தான்" என்று பீடிகையோடு ஆரம்பித்தார் சிவக்குமார். லால்குடி, காட்டூர் கிராமத்தில் டீக்கடை நடத்தி வரும் இளைஞர்.

"எங்க அப்பாவுக்கு மொத்தம் மூணு மனைவிங்க. மூணு பேரும் சகோதரிங்க. எங்கம்மா ருக்மணியை மொதல்ல கட்டிக்கிட்டவரு, காலப்போக்குல அவங்க தங்கைங்க ரெண்டு பேரையும் இருமணம் செஞ்சுக்கிட்டாரு. இப்ப எப்படியோ, அந்தக் காலத்துல இதெல்லாம் சகஜம்போல. மூணு சகோதரிகளும் இந்த டீக்கடை பின்புறம்தான் ஒத்துமையா குடும்பம் நடத்தியிருக்காங்க.





• சிவக்குமார்

அப்பா இருந்தவரைக்கும் தினமும் எழுபது லிட்டர் பால்ல டீ அடிப்பார். இப்ப முப்பது லிட்டர் ஓடுது. காலைல அஞ்சு மணிக்கு ஆரம்பிச்சார்னா நைட்டு பத்து மணி வரைக்கும் அசராம வேலை பார்ப்பார். இன்னைக்கு எடுத்துக்கிட்டாக்கூட டீப் பட்டறையிலே அவரைப் போல நின்னு வேலை செய்ய ஆள் கிடையாது. இங்கியே ஓரமா டிபன் கடையும் நடத்தறோம். காலம்பற இட்லி, தோசை, பூரி. மதியம் சாப்பாடு. நைட்டு புரோட்டா, இட்லி, தோசை. எங்க வீட்லயே இருபத்தி மூணு டிக்கெட் இருந்ததாலே வேலைக்கு யாரையும் வெச்சுக்கணும்னு அவசியமே வரலே. என்னோட அப்பா எப்படி கடின உழைப்பாளியோ, அது போலவே என்னோட அம்மா, சித்திங்க ரெண்டு பேரும் கடின உழைப்பாளிங்க. அதனாலதான் இந்த ஒரு டீக்கடை ஹோட்டலை வெச்சுக்கிட்டு நாங்க இருபத்தி மூணு பேரும் வயிறார சாப்பிட முடிஞ்சுது.

அப்பா இன்னும் கொஞ்ச நாள் வாழ்ந்திருந்தா நாங்க எல்லாரும் ரொம்ப சந்தோஷப்பட்டிருப்போம்" என்கிறார் சிவக்குமார். மகன் பேசுவதையே பார்த்துக்கொண்டிருந்த ருக்மணி அம்மாளின் முகத்தில் கணவர் குறித்துப் பேசியதில் ஆட்டோகிராப் குறித்த இனம் புரியாத மகிழ்ச்சி. அதைத் தொடரவிடாமல் கேட்கிறது 'ஒரு டீ போடுப்பா' குரல். சிவக்குமார் குடும்பம் வேலையில் பரபரப்பாகிறது.

**- இருள்நீக்கியான்**

# சிக்கலில் ராஜ், விஜய்!



**ஸ்**டாலினின் தீவிர ஆதரவாளர்களான தாம்பரம் எஸ்.ஆர். ராஜாவுக்கும், ஆலந்தூர் தா.மோ. அன்பரசனுக்கும் சீட்டுகள் கொடுக்கப்பட, டி.ஆர்.பாலுவின் சிஷ்யர்களான தாம்பரம் வைத்தியலிங்கத்துக்கும், ஆலந்தூர் பாரதிக்கும் 'அல்வா' கொடுத்துவிட்டார்கள்.

**தி**ண்டிவனம் தொகுதியில் பா.ம.க. சார்பில் போட்டியிடும் என்.எம். கருணாநிதி, முன்பு ராமதாஸை விட்டுப் பிரிந்து சென்று வாழப்பாடியாருடன் கைகோத்தவர். அப்போது டாக்டரைப் பற்றி ரொம்பவும் டேமேஜிங் புத்தகம் போட்டவர். இருந்தும் இவருக்குச் சீட்டு கொடுக்கப்பட்டிருக்கிறதே என்று பா.ம.க.வில் யாரும் வியக்கவில்லை. காரணம், இவர் ராமதாஸின் அக்கா மகனாம்.



**போ**ட்டியிடும் முக்கிய அரசியல் கட்சிகளில் தே.மு.தி.க.வுக்கும், விடுதலைச் சிறுத்தைகளுக்கும் தேர்தல் கமிஷன் தனி சின்னம் ஒதுக்கவிருக்கிறது. விஜயகாந்துக்கு கட்டை விரல் (தம்ஸ் அப்), எரியும் ஜோதி என இரண்டிலொன்றும் சிறுத்தைக்கு ஏணியும் கிடைக்கலாம் என்கிறார்கள். ஆனால் தேர்தலுக்குப் பதினைந்து நாட்கள் முன்னதாக கிடைக்கவிருக்கும் இந்தச் சின்னங்களை மக்களிடம் கொண்டு சேர்ப்பதற்குள் தேர்தல் முடிந்துவிடுமே என்று கவலைப்படுகின்றன இந்தக் கட்சிகள்.

**நி**யூஸ், நடப்பு நிகழ்ச்சிகள் ஆகிய எதுவும் போட முடியாத நிலையில் சிக்கித் தவிக்கின்றன ராஜ் மற்றும் விஜய் தொலைக்காட்சிகள். கூடவே இப்போது தேர்தல் சமயத்தில் கட்சிகள் கொடுக்கும் பிரசார விளம்பரங்களையும் போடக் கூடாது என்று சொல்லப்பட்டுவிட்டதாம். 'நிகழ்ச்சிகளில்தான் கத்தரிக்கோல் போட்டார்கள். இப்படி வருமானத்திலும் கைவைக்கிறார்களே' என்று புலம்புகின்றன தொலைக்காட்சி வட்டாரங்கள்.

**ஆ**தரவு தெரிவித்து சீட் கிடைக்காத உதிரிக் கட்சிகளையும், குட்டி அமைப்புகளையும் கூப்பிட்டு 'உபசரித்து' ஆதரவைத் தொடரும்படி கேட்டுக் கொண்டார் அம்மா. ஆனால் இலட்சிய தி.மு.க. - டி.ராஜேந்தர் மட்டும் முறுக்கிக் கொண்டுவிட்டார்.



**- சஞ்சயன்**

படங்கள் : **ஸ்ரீஹரி, ராஜன்**

# கு.ஞானசம்பந்தன் 14



"கலைவாணர் அண்ணன்கிட்ட கேட்டேனா..." என்றபடி 'சர்'ரென்று பொடியை மூக்கில் இழுத்து உறிஞ்சி கூட்டத்தை ஒரு பார்வை பார்த்தார் அந்த காமெடி நடிகர். அந்தப் பொடியின் காரம், மணம், குணத்தால் கூட்டம் கிறங்கி அமர்ந்திருந்தது.

"கலைவாணர் என்.எஸ்.கிருஷ்ணன் அவர்கள் ஒரு புது நடிகருக்கு நடிப்புச் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தார். 'இந்தா பாருப்பா, ஸ்க்ரீன் மேலே போன உடனே கூட்டத்தைப் பார்த்து நடுங்கிப் பயந்திடக் கூடாது தெரியுதா?'

'சரிண்ணே... ஆனா வசனம் பேசுறப்பத்தான் பயமா இருக்கண்ணே, யாரைப் பார்த்துப் பேசுறதுன்னு குழப்பமா இருக்கு' என்றார் அந்தப் புது நடிகர்.




அதற்கு கலைவாணர் என்.எஸ்.கே. அவர்கள், 'பயப்படக்கூடாது தம்பி. வசனம் பேசுறப்ப நான் சொல்லித் தர்றதை நினைவுல வச்சுக்கோ. அதாவது ஒரு வசனத்தை உங்கூட நடிக்கிற நடிகரைப் பார்த்துப் பேசு, மறு வசனத்தைக் கூட்டத்தைப் பார்த்துப் பேசு. ஒண்ணு இங்கே, ஒண்ணு அங்கே அவ்வளவுதான் வெளுத்துக்கட்டு.. புரியுதா?' என்று சொல்லிக் கொடுத்திருக்கிறார்.

மறுநாள் நாடகம் அந்தப் புது நடிகருக்கு. மகாபாரதத்தில் அர்ச்சுனன் வேடமாம். மேடைக்குப் போனவுடன் என்.எஸ்.கே. சொன்னது அவர் நினைவுக்கு வந்ததாம். அம்புப் பெட்டியில் இருந்து அம்புகளை எடுத்து, ஒரு அம்பு மேடையில் இருந்த துரோணர் மீது, ஒரு அம்பு ஆடியன்ஸ் மீது என்று சரமாரியாக அம்பு தொடுக்க, கூட்டம் அலறியடித்துக் கொண்டு ஓடியதாம்..." என்று அவர் தன் காமெடிச் சரக்கையும் சேர்த்துச் சொல்ல கூட்டம் அலை அலையாய்ச் சிரித்து ஓய்ந்தது.

அந்த நாடகக் கலைஞர்கள்

வாழ்க்கையில் வறுமை இருந்ததென்னவோ உண்மைதான். ஆனால் கலைவாணியாகிய சரஸ்வதி தேவியின் அருள் எப்போதும் உடன் இருந்ததால் அவர்கள் பசியை வயிற்றிலும், மகிழ்ச்சியை மனத்திலும் சுமந்துகொண்டே பழங்கால பாணர்கள் போல பிரயாணம் செய்து கொண்டேயிருந்தார்கள் என்பதுதான் உண்மை.

மறுநாள் திங்கட்கிழமை. எனக்குப் பொதுவாக அந்த நாளைக் கண்டாலே பயம் உண்டு. அன்றைக்குக் கட்டாயம் பள்ளிக்கூடம் போயாக வேண்டும். அதைக்காட்டிலும் வீட்டுக் கணக்கு, மனப்பாடம் பண்ணிச் சொல்ல வேண்டிய பாடம் அத்தனையும் அதிகாலையிலேயே ஞாபகத்துக்கு வந்து படுத்தும்.

அதிலும் நாங்கள் பள்ளிக்கூடத்துக்குப் போகிற அழகே அழகுதான். என் தந்தையார் வேலை பார்த்த அதே பள்ளியில்தான் நானும் என் நண்பர்களும் சகோதரிகளும் படித்து வந்தோம். என் தந்தையார் சரியாக 8.30 மணிக்குக் கிளம்ப, என் சகோதரிகள் கடமையே கண்ணாகப் பின்னாடி கிளம்பி விடுவார்கள். அப்போதுதான் என் பேனாவில் 'இங்க்' இருக்காது. என் நோட்டு காணாமல் போயிருக்கும். என் மஞ்சள் பையைத் திருடன் திருடியிருப்பான். இலேசாக வயிறு கலக்குவது போலவும், சற்று நேரத்தில் செத்துவிடப் போவது போலவும் பல்வேறு தோற்றங்கள் ஏற்படும்.

நான் முதன் முதலாகப் பள்ளிக்கூடம் போனபோது என்னை அடித்து இழுத்துத்தான் சென்றதாக ஊரே சொல்லும். அதிலும் நான் முதன்முதலாகச் சென்றது ஒரு கிறிஸ்தவப் பள்ளிக்கூடம். அதில் சிலுவையில் அறையப்பட்ட ஏசுவின் உருவத்தைப் பார்த்து யாரோ சரியாகப் பள்ளிக்கூடம் வராத பையன் போல என்று நினைத்து அப்போதே நான் வருந்தியதுண்டு.

நான் தேடிய பொருள்களையெல்லாம் என் தாயார் பல்வேறு இடங்களில் இருந்து சேகரித்துக்கொண்டு வந்து 'ஓடு... ராஜா ஓடு... உன் அப்பா திரும்பிப் பார்க்கிறார்' என்று



## ஆயிரம் விளக்கா... ஆளை விடுங்க!

ஐநூறு எபிசோடுகளை வெற்றிகரமாகக் கடந்துவிட்டது 'கல்கி' தொடர். இன்னும் ஐநூறு எபிசோடுகள் இதே வேகத்தோடு பயணிக்கும் என்கிறார், தொடரைத் தயாரித்து கல்கியாக கலக்கி வரும் குஷ்பு. 'ஆயிரம் விளக்குத் தொகுதியில் ஸ்டாலினை எதிர்த்து ஏன் போட்டியிடவில்லை?' என்றால் "கணவர் ஹீரோவாக நடிப்புக் களத்தில் நிற்கிறார். முதலில் அவரை உற்சாகப்படுத்த வேண்டும். அரசியலை அப்புறம் பார்க்கலாம் ஆளைவிடுங்க" என்று எஸ்கேப் ஆகிறார்.

- ஸ்ரீ

சொல்லுமுன் நான் தெரு நாய்களை முந்திக்கொண்டு அந்தப் பள்ளிக்கூட ஊர்வலத்தில் கலந்து கொள்வேன்.

முதலில் அப்பா, அடுத்தது சகோதரிகள், அடுத்தது சிவனாண்டி, சிவத்தக் காளை, கடைசியாக நான். ஒரு தென்னந் தோப்பைக் கடந்து எங்கள் பால்ய நண்பரான அந்தப் பிள்ளையாரை வணங்கி விட்டு, வைகை ஆற்றில் முழங்கால் தண்ணீரில் மீன்கள் காலைக் கடிக்க நடந்து, மணலில், பிறகு தோப்பில் என்று ஒரு வழியாக பள்ளிக்கூடம் அருகில் போவோம்.

''நேத்து குறள் ஒன்று சொல்லச் சொன்னேனே, எங்கே இப்பச் சொல்...'' என்றபடி வைகை ஆற்றின் நடுவில் ஊர்வலத்தை நிறுத்தி என்னிடம் கேட்டார் என் தந்தை.

இப்படி அடிக்கடி நடப்பது உண்டு. நான் வெள்ளந்தியாக என் நண்பர்களைப் பார்க்க, அவர்கள் வேதாந்தியாக என்னையே திரும்பப் பார்த்தார்கள்.

''அவன்தான் இராத்திரி எல்லாம் உங்ககிட்டகூடச் சொல்லாமல் நாடகத்துக்குப் போயிட்டானே... எப்படி ஞாபகத்துக்கு வரும்'' என்று ஒரு சகோதரி கேட்க,

''பாவம்... நல்லாப் படிக்கிற பையன் தான்... ஏண்டா... இராத்திரி பூராவுமா முழிச்சுக்கிட்டே நாடகம் பார்த்தே. இன்னிக்கு அப்பா வகுப்பிலே தூங்கிராதே...'' என்று மற்ற சகோதரி சொல்ல...

நான் மெதுவாக...

''தூங்குக தூங்கிச் செயற்பால
தூங்கற்க
தூங்காது செய்யும் வினை'' என்று சொல்லவும்,

''சபாஷ்'' என்றார் என் தந்தை. என் சகோதரிகள் முகம் பேயறைந்ததைப் போலாயிற்று. என் நண்பர்கள் அந்தப் பக்கம் திரும்பிக் கை தட்டினார்கள்.

மத்தியானம் வகுப்புக்குப் போவதற்கு முன் சினிமாமணியின் மூலமாக அவசரச் செய்தி வந்தது.

'சினிமா குழுவினர் வந்து விட்டார்கள். படத்தின் பெயர் 'பட்டிக் காடா... பட்டணமா'

*(ரீல் சுற்றும்)*

படம் : **புதூர் சரவணன்**

# அன்பழகன் அவ்வளவுதானா?

1991 தேர்தல்.... ராஜீவ் காந்தி அனுதாப அலை நாடு முழுவதும் வீச... தி.மு.க., தான் போட்டியிட்ட அத்தனை தொகுதிகளிலும் மண்ணைக் கவ்வுகிறது. ஓரேயொரு தொகுதியைத் தவிர... அந்தத் தொகுதி துறைமுகம். வெற்றி பெற்றவர் கலைஞர். அந்த அளவுக்கு தி.மு.க.வின் கோட்டையாக இருக்கும் இந்தத் தொகுதி, கடந்த பத்தாண்டுகளாக பேராசிரியர் அன்பழகன் வசம் இருக்கிறது.

தேர்தல் அனல்காற்று சற்றுக் கூடுதலாகவே வீசுகிறது துறைமுகத்தில். தி.மு.க. சார்பாக மீண்டும் பேராசிரியரும், அ.தி.மு.க. கூட்டணியில் இடம்பெற்றுள்ள ம.தி.மு.க.வின் சார்பாக சீமா பஷீரும் போட்டியிடுகின்றனர். இவர்கள் தவிர விஜயகாந்த் கட்சியும் வேட்பாளரைக் களமிறக்குகிறது.



* சீமா பஷீர்



* சிவகுமார்

சுவர் விளம்பரம், போஸ்டர் பிரசார வாகனம், ஸ்பீக்கர்களில் கொள்கை விளக்கப் பாடல்கள் என்று களைகட்டி இருக்கிறது துறைமுகம். பிரசாரத்தில் இருந்த ம.தி.மு.க. வேட்பாளரை வழியில் மடக்கிப் பேசினோம்.

"தொடர்ந்து பதினஞ்சு வருஷத்துக்கு மேல தொகுதிக்குத் தொடர்பில்லாதவங்ககிட்டதான் தொகுதி இருந்துட்டு இருக்கு. அதனாலதான் தொகுதிக்குள்ள எந்தவிதமான நலப்பணிகளும் நடக்கல. ஆனா நான் தொகுதிக்காரன். கடந்தகால மோசமான அனுபவங்களால வெளியூர்க்காரர்களால் நமக்குப் பலனில்லைன்னு மக்கள் புரிஞ்சுக்கிட்டாங்க. அதனால மண்ணின் மைந்தனான எனக்கு வாய்ப்பளிக்க மக்கள் முடிவெடுத்துட்டாங்க. அதுமட்டுமில்லாம எம்.எல்.ஏ. தொகுதிக்குள்ளேயே வர்றதில்ல. அவருக்குப் பதிலா மாவட்டச் செயலாளர் பலராமன் கவனிப்பார்னு சொன்னாங்க. ஆனா மக்களால ரெண்டு பேரையுமே சந்திக்க முடியாது. எதிர்கட்சித் தலைவரா இருந்த அன்பழகன் நினைச்சிருந்தா இந்தத் தொகுதி மக்களுக்கு முழுமையான வெள்ள நிவாரணம் கிடைச்சுருக்கும். ஆனா அவர் எதையுமே செய்யல. இப்படி நிறைய அதிருப்திகள் இருக்கு. அன்பழகன் அவ்வளவுதான். இனி ஜெயிக்கப் போறதில்ல. இந்தத் தொகுதியில பம்பரம் சுத்தறது உறுதி" என்று உற்சாகம் பொங்குகிறார் வேட்பாளர் சீமாபஷீர்.

"ஆனால் இது உண்மையல்ல" என்கிறார் தொகுதி மக்களின் செல்லப் பிள்ளையும், தி.மு.க. பிரமுகருமான துறைமுகம் காஜா. இவர் துறைமுகம் தொகுதியில் முன்பு ஒருமுறை கலைஞரை எதிர்த்தே போட்டியிட்டவர்.

"துறைமுகம் தொகுதியில் தி.மு.க. வலுவாக இருப்பதால் வெற்றி எளிதாக இருக்கும். எனவே இந்தத் தொகுதியில் அதிக நாள் பிரசாரம் செய்யாமல், மாநிலம் முழுவதும் பிரசாரம் செய்ய வசதியாக இருக்கும் என்பதால்தான் பேராசிரி

யர் மீண்டும் இங்கு போட்டியிட விரும்பினார். நான் போட்டியிடாததால் எனக்கு எந்த வருத்தமுமில்லை. இப்போது எனக்கு பொறுப்பு மேலும் கூடியிருக்கிறது. பேராசிரியரை வெற்றி பெற வைத்து, வெற்றிக்கனியை கலைஞரிடம் சமர்ப்பிக்கும் வரை ஓயமாட்டேன்'' என்றவரிடம்

"எம்.எல்.ஏ. தொகுதிக்குள் வராமல் இருந்தது அதிருப்தியை ஏற்படுத்தி இருக்கிறதே..." என்றதற்கு,

"அதெல்லாம் பொய்யான குற்றச்சாட்டு. எதிர்கட்சித் தலைவரான அவர், தானே ஒவ்வொன்றுக்கும் நேரில் வரமுடியாது என்பதால் மாவட்டச் செயலாளர் பலராமன் எல்லாவற்றையும் செய்து வருகிறார்'' என்றார் காஜா.



• அன்பழகன்

தொடர்ந்து வயதான எம்.எல்.ஏ.க்களையே பார்த்துவிட்டதால் 'எங்களுக்கு இனிமேலாவது ஒரு ஆக்டிவான எம்.எல்.ஏ. வேண்டும்' என்றனர் நாம் சந்தித்த பெரும்பாலான வாக்காளப் பெருமக்கள்.

''இந்தத் தடவையும் பெரியவரே (அன்பழகன்) நிக்கிறாரு. அவரு மேல ஏகப்பட்ட கம்ப்ளைய்ண்ட் இருக்குது. சுத்தமா தொகுதிப் பக்கமே வரல. வெள்ள நிவாரணம் வாங்கித் தர்றதுக்கு வரவே இல்ல. ரெண்டு மூணு தெருவுக்கு வந்ததோட சரி. ட்ரைனேஜ் பிராப்ளம் குடிசைப் பகுதியில ஜாஸ்தி. நிறைய பிரச்னை இருக்குது. இந்தத் தடவை பெரியவரு நிக்காம துறைமுகம் காஜா நின்னாருன்னா ஜெயிக்கறது ஈஸியா இருக்கும்'' என்றார் ஆட்டோ டிரைவர் முத்து.

அ.தி.மு.க. பகுதிச் செயலாளரான சரவணகுமார் பேசும்போது, "அதிக மின்தடை இருக்கும் பகுதியில டிரான்ஸ்ஃபார்மர்கள் ஏற்பாடு செய்யணும்னு பலமுறை கேட்டும் அன்பழகன் செய்யவே இல்லை. நாங்கதான் முயற்சி யெடுத்து செஞ்சோம். சத்யா நகர்ங்கறது முக்கியமான ஏரியா. அங்க கழிப்பறை வசதியே கிடையாது. கடந்த 15



• காஜா

துறைமுகம்

வருஷமா தொகுதியில சட்டமன்ற உறுப்பினர் அலுவலகமே கிடையாது. எந்த மனுவா இருந்தாலும், அதைத் தூக்கிட்டு கீழ்ப்பாக்கத்துல இருக்குற எம்.எல்.ஏ. வீட்டுக்குத்தான் போகணும். தொகுதியை வந்து எட்டிக்கூடப் பார்க்காதது பொதுமக்களிடம் பலத்த அதிருப்தியை உருவாக்கியிருக்கு. அதனால அ.தி.மு.க. கூட்டணியின் வெற்றி உறுதியாயிடுச்சு" என்றார்.

"அன்பழகன் தொகுதிக்குள் அடிக்கடி வராததெல்லாம் ஒரு பிரச்னையே இல்லைங்க" என்று கூலாகச் சொன்னார் சிவகுமார். காங்கிரஸ் சர்க்கிள் தலைவர்.

"அவ்ளோ பெரிய மனுஷன் அவரு. அதனால தொகுதிக்குள்ள வரலைங்கறதைப் பத்தி ஜனங்க ஒண்ணும் தப்பா நினைக்கல. அவர் அமைச்சரா இருந்தப்போ செய்த நல்ல காரியங்களுக்காகவே மக்கள் அவருக்குத் திரும்பத் திரும்ப வோட்டுப் போடத் தயாரா இருக்காங்க. இந்தத் தடவை எதிர்கட்சியில் இருந்ததால அரசாங்கம் மாற்றாந்தாய் மனப்பான்மையோட நடந்துக்கிட்டது. இருந்தாலும் கூட சமுதாயக் கூடங்கள் கட்டித் தர்றது, இரவுநேர பாடசாலை கட்டித் தர்றதுன்னு நிறைய செய்திருக்காரு. இந்தத் தொகுதியில் வேட்பாளரா நிக்கற சீமாபஷீரு பேருக்குத்தான் ஊர்க்காரரு. ஆனா அவருக்குத் தொகுதியைப் பத்தி ஒண்ணுமே தெரியாது. மக்களோட பிரச்னைகளும் தெரியாது. தேர்தல் சமயத்துல மட்டும் அரசியலுக்கு வர்ற தொழிலதிபர் அவர். அதனால தி.மு.க. கூட்டணி வெற்றி வாய்ப்பு பிரகாசமா இருக்கு" என்று விட்டுக் கொடுக்காமல் பேசினார் சிவகுமார்.

"இத்தனை தடவையும் ஜெயலலிதாவுக்குத்தான் வோட்டுப் போட்டேன். இந்தத் தடவை எங்களுக்கு யாரு நல்லது செய்றாங்களோ அவங்களுக்குத்தான் வோட்டுப் போடுவேன். எங்களுக்கு என்னங்க வேணும்... இருக்குற இடம் நல்லா இருக்கணும். அதுக்கு ஏற்பாடு பண்ணணும். வெள்ளம் வந்தப்போ எங்களுக்கு எந்த உதவியும் செய்யாட்டியும்கூட, நேர்ல வந்து ஆறுதலாவது சொல்லியிருக்கலாம். ஆனா யாருமே அதைச் செய்யல." என்று நம்மிடம் ஆதங்கப்பட்டார். ஏரியாவில் ஆப்பக்கடை நடத்தும் கல்யாணி.



• சரவணகுமார்



• மணிகண்டன்



• முத்து



• கல்யாணி

"அண்ணே, என் வோட்டு விஜயகாந்துக்குத்தான்" என்றான் 18 வயதுச் சிறுவன் மணிகண்டன். கையில் வாக்காளர் அடையாள அட்டை. "எங்க அம்மா, அப்பால்லாம் சூரியனுக்குத்தான் வோட்டுப் போடுவாங்க. ஆனா இப்போதான் முதன் முறையா வோட்டுப் போடப் போறேன். எங்க தலைவரு நின்னாலும் சரி, நிக்கலைன்னாலும் சரி... அவரு கட்சிக்குத்தான் என் வோட்டு" என்றான்.

வி.ஐ.பி.கள் முதல் முறை போட்டியிடும்போது ஒரு வித ஆர்வத்தில் அதிக அளவில் வாக்குகள் விழும். அடுத்தமுறை அதிருப்தி காரணமாக வாக்கு வித்தியாசம் கடுமையாகச் சரியும். அதற்கு உதாரணம் துறைமுகம் தொகுதி. முதல்முறை போட்டியிட்டபோது பெருவாரியான வாக்குகள் வித்தியாசத்தில் வென்ற அன்பழகன், கடந்த முறை வெறும் நானூறுக்கும் குறைவான வாக்குகள் வித்தியாசத்திலேயே வென்றுள்ளார். தொகுதி மக்களிடம் அதிருப்தி இருப்பதால் இந்த முறை உதயசூரியனை உதிக்கச் செய்ய கடுமையாகப் போராட வேண்டியிருக்கும்.

- ஆர்.முத்துக்குமார்

படங்கள் : ராஜன்

# ஏழைகளின் நர்சரி!

"அம்மா நல்லா இருக்கணும். அப்பா நல்லா இருக்கணும். எங்களுக்கு இந்தச் சாப்பாடு தினமும் கிடைக்கணும். நாங்க எல்லாரும் நல்லாப் படிக்கணும்" - மழலை மொழியில் மந்திரம் போல் உச்சரிக்கின்றன ஸ்ரீரங்கம் மூலத் தோப்பு அங்கன்வாடி குழந்தைகள். காலை முதல் மாலை வரை இவர்களுக்கு அம்மாவாக இருந்து அன்பு செலுத்தி வருகிறார் இந்த அங்கன்வாடி மையத்தின் பணியாளர் சரஸ்வதி.

"தனியா மாசா மாசம் பணம் கட்டி குழந்தைங்கள நர்சரி ஸ்கூல்ல சேர்க்க முடியாத ஏழை பாழைங்களுக்கு இந்த அங்கன்வாடிதாங்க நர்சரி. இந்த மையத்துல இருபத்தஞ்சு குழந்தைங்க இருக்காங்க. காலையில் இறைவணக்கம் சொல்லுவாங்க. கூடவே இப்பவே அவங்களுக்கு தியானம் சொல்லித் தர்றோம். கொஞ்சம் அப்படி இப்படித்தான் இருக்கும். குழந்தைங்க இல்லையா... கொஞ்ச நேரத்துக்கப்புறம் சத்து மாவு உருண்டை தருவோம். அப்புறம் அவங்ககிட்ட மனசுவிட்டுப் பேசுவோம். சாப்பிட்டியா, பல்லு தேய்ச்சியா, குளிச்சியான்னு பதில் வர்ற வரைக்கும் விடமாட்டோம். விளையாட்டுப் பொருட்களை வச்சு உற்சாகமா பொழுதுபோக்க சொல்லித் தர்றோம்.

மாசம் ஒருமுறை அவங்களோட உடல் எடையைப் பதிவு பண்ணுவோம். சரியான எடை இல்லைன்னா பெற்றோர்கிட்ட சொல்லி சத்துணவு கொடுக்கச் சொல்லுவோம். வாரம் ரெண்டு தடவை வீடுகளுக்கு விசிட் செஞ்சு கருவுற்ற, பாலூட்டும் தாய்மார்களை சந்திச்சு அவங்க நலனில் அக்கறை செலுத்துவோம். போலியோ சொட்டு மருந்து விஷயத்திலும் எங்க பங்கு குறிப் பிடத்தக்கது. ஒரு சம்பவத்த சொல்லணும்...

எங்க பகுதிக்கு அருகே அடுக்குமாடிக் குடியிருப்பில் ஒரு குழந்தைக்கு போலியோ சொட்டு மருந்து போடப்படவே இல்லை. நேர்ல போய் குழந்தைக்கு போலியோ சொட்டு மருந்து போட்டுக்கங்கன்னு சொன்னேன். தனியார் ஆஸ்பத்திரியில போட்டுக்கிறோம்னு சொன்னாங்க. இது தனியார் ஆஸ்பத்திரியில் கிடைக்காதுன்னு தெளிவுபடுத்திய பின்னரும் அவங்க முகாமுக்கு வரவே இல்லை. அவங்களோட வறட்டு கௌரவத்தைக் காட்டிலும், ஒரு குழந்தையோட உடல்நலனே மிகவும் முக்கியம்னு நெனச்சு நானே அவங்க இருப்பிடம் தேடிப்போய் போலியோ சொட்டு மருந்து போட்டுவிட்டேன்!" என்று கூறும் சரஸ்வதி, பி.ஏ. தமிழ் இலக்கியம் பயின்றவர். இருபது வருடங்களுக்கும் மேலாக இந்த அங்கன்வாடியில் பணிபுரிந்து வருகிறார்.

- திருநாவுக்கரசு



* சரஸ்வதி

நூறு நானோ மீட்டரைவிட நுட்பமாகப் பொருள்கள் தயாரிக்கும் திறமைதான் நானோ டெக். இந்தத் திறமையை இரண்டுவிதமாக அணுகுகிறார்கள் என்று சொன்னோம். 'டாப் டவுன்' 'பாட்டம்அப்'.

தற்போது மைக்ரோ சிப்களைத் தயாரிக்கப் பயன்படும் போட்டோ லித்தோகிராபி முறைகளைத் திருத்தி அமைத்து, நானோ லெவலுக்குக் குறைக்க முடியும். ஆனால் அதற்கு அதிக செலவாகும்.

சாஃப்ட் - மிருதுவான - லித்தோகிராபி என்ற முறையில் இதைச் சாதித்திருக்கிறார்கள். அல்ட்ரா வயலட் கதிர்களைப் பயன்படுத்தி செதுக்குகிற போது, இதன் சாத்திய எல்லைகளைத் தொட்டுவிட்டார்கள். இதற்குமேல் சின்னதாக இந்த முறையில் செய்ய முடியாது என்று கைவிரித்துவிட்டார்கள்.

அண்மையில் கண்டு பிடிக்கப்பட்ட அட்டாமிக் ஃபோர்ஸ் மைக்ராஸ்கோப் - அணுசக்தி நுண்ணோக்கியை வைத்துக்கொண்டு 'டிப் பென்' என்னும் முறையைப் பயன் படுத்தி அதிநுட்பமான சில்லுகளைத் தயாரிக்கிறார்கள். இதையும் நானோ டெக்னாலஜி இயலில் சேர்க்கலாம்.

இதில் ஆதாரமாக அணு பரிமாணமுள்ள பேனா முனையை வைத்துக் கொண்டு தங்கத் தகட்டில் கோடு வரைகிறார்கள். இதன் நுட்பத்தை ஒரு மாலிக்யுல் அளவுக்குக்கூட கொண்டு போக முடியும். ஆனால் இந்த முறையின் மிகப்பெரிய குறை, வரைவதற்கு மாதக்கணக்கில் ஆகலாம். இதனால் இந்த முறையில் சூப்பர் ஸ்பெஷல் சில்லுகளைத்தான் வரைய முடியும். விலை கட்டுப்படியாகாது.

எனவே மேலிருந்து கீழ் குறைத்துக் கொண்டே போகும் லித்தோகிராபி முறைகளை விட்டு, கீழிருந்து மேல் அணு அணுவாக அமைத்துப் பெரிது பண்ணும் 'பாட்டம் அப்' முறைகளை மற்றொரு குழுவினர் ஆராய்ந்து

# இந்தியாவுக்கு பெட்ரோலே வேண்டாம்!



சுஜாதா

வருகிறார்கள். இதைச் சரியாகப் பயன்படுத்த அணு அல்லது கூட்டணு அளவில் ஆதார இயற்பியல் விதிகள் க்வாண்டம் விதிகளாக இருப்பதால், அவற்றை எதிர்பார்த்துச் சொல்வது கடினமாக இருக்கிறது. இதன் காரணமாக அந்த விதிகளில் எவ்வெவற்றை நிச்சயமாகச் சொல்ல முடிந்து, அவற்றுக்கேற்ப உற்பத்தி முறைகளை அமைக்க முடியும் என்பதைத்தான் ஆராய்ச்சி சாலைகளில் கவனித்து வருகிறார்கள்.

க்வாண்டம் புள்ளிகள் என்ற விளைவை 1970களில் இயற்பியலாளர்கள் கண்டறிந்தனர். அணுக் கட்டடத்தில் உட்கருவைச் சுற்றும் எலக்ட்ரான்கள் விதிக்கப்பட்ட பாதைகளிலிருந்து லேசர் தைரியம் பெற்று கட்சி மாறும்போது வெளிப்படும் வெளிச்சத்தின் அலை நீளத்தைச் சார்ந்த இந்த இயல், தற்போது உங்கள் சி.டி. ப்ளேயரில் கூடப் பயன்படுகிறது. உங்கள் குறுந்தகட்டில் உள்ள சங்கீதத்தைச் சார்ந்த மேடுபள்ளங்களை லேசர் டையோடு என்னும் சாதனத்தைக் கொண்டு டிஜிட்டலாகப் படிக்கிறது. இந்தச் சாதனத்திலிருந்து தயாரிக்கப்பட்ட மிகச் சிறிதான ஒரு பகுதியை 'நானோ க்ரிஸ்டல்' என்பார்கள். சில சமயம் அதை 'க்வாண்டம் டாட்' என்றும் சொல்வார்கள். இத்தனை சிறிய அளவில் இதன் இயல்புகள் பெரிய அளவியல்புகளிலிருந்து மிகவும் மாறுபடுகின்றன. இந்த உண்மையை சற்றும் எதிர்பாராத விதத்தில் மருத்துவத்தில் வியாதிகளைக் கண்டறிய... ஏன் குணப்படுத்தக்கூடப் பயன்படுத்தியிருக்கிறார்கள். நானோ க்ரிஸ்டல்களைக் கலந்து பரிசோதித்தால் சில வியாதிகளைத் துரிதமாகக்



• அணுசக்தி நுண்ணோக்கி

# சாகஸம் ஆயிரம் - 5

# குணக் குன்றுகள்!



'நவசக்தி' பத்திரிகையில் நான் இருந்த போது, அண்ணா முதல்வர். அவரின் அந்தரங்கச் செயலாளராக இருந்த சொக்கலிங்கம் ஐ.ஏ.எஸ். பற்றி 'சொக்கலிங்க புராணம்' என்ற தலைப்பில் விமர்சனக் கட்டுரைத் தொடர் ஒன்று எழுதி வந்தேன். அது அண்ணாவை தர்ம சங்கடத்தில் ஆழ்த்தியது. என்னைச் சந்திக்க விரும்பி சொல்லி அனுப்பினார். சந்தித்தேன்.

"நீ ஒரு அரசாங்க அதிகாரியைப் பற்றி எழுதிக் கொண்டிருக்கிறாய். அவர் தன் நிலையை விளக்கி அறிக்கை கொடுக்க முடியாது. என் அந்தரங்கச் செயலாளர் குறித்து நான் விளக்கம் அளிப்பதும் பொருத்தமாக இருக்காது. இதற்கு மேல் எதுவும் சொல்ல நான் விரும்பவில்லை. உனக்கு எது சரி என்று தோன்றுகிறதோ அதைச் செய்" என்றார் அண்ணா.

மறுநாள் காமராஜரைச் சந்தித்து அண்ணா சொன்னதை எடுத்துச் சொன்னேன். காமராஜர், "அவர் விரும்பவில்லை... என்று அவரே உன்னை அழைத்துச் சொன்ன பிறகு நீ எழுதுவது அவசியம் தானா? நிறுத்திவிடு" என்றார்.

உடனே கட்டுரை நிறுத்தப்பட்டது. அது தொடர்பாக பல்வேறு வதந்திகள் பரவின. ஆனால் என்னைப் பொறுத்தவரை அண்ணாவும், காமராஜரும் எத்தகைய பண்பட்ட தலைவர்கள் என்று எனக்குள் எண்ணி, எண்ணி பூரித்துப் போனேன்.

***- சமீபத்தில் காலமான பத்திரிகையாளர் பி.சி. கணேசன் எழுதிய 'திரும்பிப் பார்க்கிறேன்' புத்தகத்திலிருந்து...***

**- கௌசி**

கண்டுபிடிக்க முடிகிறது. நானோ துகள்கள், மருந்துகள் உடலினுள் உரிய இடத்தில் சரியாகப் போய்ச் சேர உதவுகின்றன. எதிர்காலத்தில் தோல், எலும்பு போன்ற உறுப்புகளில் உள்ள குறைகளை ரிப்பேர் செய்யவும் உறுப்புகளைப் புதுப்பிக்கவும்கூட பயன்படுத்தலாம். நானோ டெக்னாலஜி அதன் குழந்தைப் பருவத்தில் இருக்கிறது என்பதை நீங்கள் புரிந்து கொண்டிருப்பீர்கள். ஆனால் இதன் எதிர்கால சாத்தியம் கற்பனையை மீறுகிறது. மைக்ரோ ஃப்ளூயிடிக்ஸ் என்னும் இயலில் அதிஅதி நுட்ப திரவப் பொருள்களைக் கலந்து பரிசோதிக்கும் முறைகளில் ஒருவரின் ரத்தத் துளி, ஏன் எச்சிலிலிருந்துகூட அவரது மருத்துவ சரித்திரத்தையே ஒரு நிமிஷத்தில் விரித்துவிடும் சாத்தியம் தெரிகிறது.

சற்று விரிவாகச் சிந்தித்தால் நானோ டெக்னாலஜி மூலம் எதிர்காலத்தில் சாத்தியமாகக்கூடிய பொருள்கள் சிலவற்றைக் கவனிக்கலாம்.

- 'டெஸ்க்டாப்' என்று சொல்லக்கூடிய மேசைக் கணிப்பொறி, எதிர்காலத்தில் நூறு கோடி நுட்பமான ப்ராஸஸர்களைக் கொண்டதாக இருக்கும்.
- சூரிய சக்தியைப் பயன்படுத்தும் அமைப்புகளில் ஆற்றலைப் பன்மடங்காக ஆக்கலாம். டாக்டர் கலாம் இதைத்தான் குறிப்பிட்டார். சோலார் செல்களின் ஆற்றலை 15லிருந்து 45க்கு உயர்த்தினால் இந்தியாவுக்கு பெட்ரோலே தேவை இல்லை.
- மருத்துவத்தில் கிருமிகளைக் கொல்வதற்கும் சேதப்பட்ட உடற்பகுதியை மராமத்து செய்யவும் வசதிகள்.
- எஃகைவிட நூறு மடங்கு பலமான உலோகங்கள் கூட்டுப் பொருள்கள்.
- ராணுவத்துக்குப் பயன்படும் பொருள்கள்.
- மாலிக்யூல் அளவில் உற்பத்தி செய்யும் திறமை.

(விந்தை தொடரும்)

படம் : ஸ்ரீஹரி

அருள்வாக்கு

ஆத்மா என்ற மாறாத ஸத்யத்தின் நிலையிலிருந்து பார்க்கிறபோது சரீரமும் சாவும் துச்சம்தான்; அவை ஒன்றுமே இல்லை. ஆனால் நாம் மாறாத ஆத்மா என்பதைத் தெரிந்து கொள்ளாதவர்களாகத்தானே இருக்கிறோம்? நமக்குத் தெரிந்தது மாறிக்கொண்டே இருக்கிற மனஸும், மாறிக்கொண்டே இருக்கிற இந்த ப்ரபஞ்சமும்தானே? சாவு உண்டாகி அடுத்த ஜன்மா ஏற்படுகிறபோது இந்த ஜன்மாவிலே இந்த ப்ரபஞ்சத்திலே நமக்கு இருந்த தொடர்புகளெல்லாம் துண்டித்துப் போய், வேறு புதுத் தொடர்புகள் உண்டாகின்றன. இதே இடத்தில், இதே குடும்பத்தில் நாம் மறுபடியும் பிறந்தால்கூட நமக்கு அது தெரியப் போவதில்லை. ஆனால் இப்படி இங்கேயேதான் பிறப்போம் என்று சொல்ல முடியாது. வேறே சூழ்நிலையில், வேறு தினுஸான மதத்தில், நாகரிகத்தில், ஸம்ப்ரதாயத்தில் போய்ப் பிறந்தாலும் பிறப்போம்.



பெரிய அளவுக்கு சூழ்நிலையினால் உருவாக்கப்படுகிறது. இந்த ஆயுள் பூராவும் நாம் ஒருமாதிரி சூழ்நிலையில் பழகி வளர்ந்துவிட்டோம். குறிப்பிட்ட ஸம்பந்தங்களை ஏற்படுத்திக்கொண்டு விட்டோம். குறிப்பிட்ட ஸம்ப்ரதாயங்களை அநுஸரித்து அவற்றில் ஒட்டிக்கொண்டு விட்டோம். இதெல்லாம் சாவோடு கத்தரித்துப் போகிறது என்பதைப் பார்க்கிறபோது (சாவு ஆத்மாவைக் கொஞ்சம்கூட பாதிப்பதில்லை என்றாலும்), ஆத்மாவாக இருக்கத் தெரியாத நம்மை ரொம்பவும் பாதிக்கத்தானே செய்கிறது? 'அடுத்த ஜன்மாவில் எந்த மாதிரிப் பிறவி ஏற்படுமோ? எந்த மாதிரிச் சூழ்நிலையில் பிறப்போமோ?' என்று பெரிய கேள்வியாகத்தானே இருக்கிறது?

# மனஸின் ஆட்டங்கள்...

ஆத்மா மாறாதது என்றாலும் நமக்கு அது தெரியாத விஷயம். மனஸின் ஆட்டங்கள்தான் நமக்குத் தெரிந்ததெல்லாம். இந்த மனஸின் வளர்ச்சி - அது நல்ல வளர்ச்சியாக இருந்தாலும் ஸரி, கெட்ட வளர்ச்சியாக இருந்தாலும் ஸரி - 'இப்பிறவி தப்பிடில் எப்பிறவி வாய்த்திடுமோ?' என்று பெரிய பெரிய மஹான்களே பயப்பட்டிருக்கிறார்களே!

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்

# இந்தியத் தகப்பன்!

## எட்டயபுரம் ராஜன்

நேர்முகத் தேர்வில் கலந்துகொண்டு என் அறைக்கு வந்த வெங்கட்ராமனின் முகத்தில் மகிழ்ச்சி தெரிந்தது.

"ராஜ், பல்கலைக்கழக லெக்சரர் வேலை உறுதியா எனக்குத்தான் தருவாங்க. இண்டர்வியூவுக்கு இன்னொருத்தர் மட்டும் வந்திருந்தாரு. பேரு கே.ஆர்.செழியன். ஆராய்ச்சி அனுபவமே இல்லாதவரு. டாக்டர் பட்டமும் வாங்கல. அவருக்கு எப்படித் தருவாங்க? அதனால வேலை எனக்குக் கிடைச்சுடும். அமெரிக்காவை விட்டுட்டு என் ஆராய்ச்சிகளை இனி இங்க தொடரலாம்" என்றான்.

"சரி, வேலையில என்னிக்குச் சேரணும்னு ஏதாவது சொன்னாங்களா" என்று கேட்டேன்.

"நாளைக்குக் காலையிலே பத்து மணிக்கு என்னையும் அந்த கே.ஆர்.செழியனையும் வரச் சொல்லியிருக்காங்க. அப்ப முடிவு தெரியும். இதுல என்ன வேடிக்கை தெரியுமா ராஜ், என்னை இண்டர்வியூ பண்ணினவரு ஒரு கேள்வி கூட என் ஆராய்ச்சி சம்பந்தமா கேட்கல. என் ஆராய்ச்சிக் கட்டுரைகளையும் பாக்கல. ஏதோ எந்திரம் மாதிரி உட்கார்ந்திருந்தாரு. 'அமெரிக்காவிலதான் ஆராய்ச்சித் துறையில வேலை செய்யுறீங்களே இங்க எதுக்கு வர பிரியப்படுறீங்க'ன்னு மொட்டையா ஒரு கேள்விய கேட்டாரு. 'என் தேசத்து மாணவர்களுக்கு நான் கற்ற வித்தைய சொல்லிக் கொடுக்க ஆசைப்படுறேன்'னு சொன்னேன். அவர் அழுத்தமா ஒரு பார்வை பார்த்துட்டு 'போகலாம்'னு சொல்லிட்டாரு" என்றான்.

"நாலு கேள்வி உன் பாடத்தில் கேட்டு மடக்கியிருக்கணும். பாவம், போனா போகட்டும்னு விட்டுட்டாருன்னு நினைக்கிறேன்" என்றேன்.

"நோ ராஜ், என்னை நிச்சயம் மடக்கியிருக்க முடியாது. கலிஃபோர்னியாவில நான் ஆய்வுக்கட்டுரை வாசித்து முடித்ததும் நோபல் பரிசு பெற்ற விஞ்ஞானிகள் கேட்ட கேள்விகளுக்கே நான் தெளிவா பதில் சொல்லி அவங்கள திருப்திபடுத்தினேன். இங்க முடியாதா? நான் கணைகளை எதிர்கொள்ளத் தயாராயிருந்தேன். ஆனா எதிர்வில்லில் நாணேற்றப்படல" என்றான்.

"இங்க ஒவ்வொருத்தனும் ஏதாவது ஒரு பட்டத்தை வாங்கிட்டு வெளிநாட்டுல வேலை கிடைக்குமா, லட்ச லட்சமா சம்பாதிக்கலாமான்னு தலைகீழா நின்னு முயற்சி பண்ணிக்கிட்டிருக்கான். நீ அங்க கொத்துக் கொத்தா கொடுக்கிற சம்பளத்தை வேண்டாம்னு உதறிட்டு இங்க வரணும்னு ஆசைப்படுற. வேடிக்கைதான். உன் தேசப்பற்று சராசரி மனிதனுக்கு வராது. நீதான் சராசரி மனிதனில்லையே. இந்த வயசுல எத்தனை பட்டம், எத்தனை ஆராய்ச்சிக் கட்டுரைகள்! சரி, குளிச்சுட்டு வா.. சாப்பிடுவோம்" என்றேன்.

அவன் துண்டு, சோப்பு முதலியவற்றை எடுத்துக்கொண்டு குளியலறைக்குள் சென்றான்.

என் மனம் பின்னோக்கிப் புரண்டது.

திருநெல்வேலி இந்து மேனிலைப் பள்ளியில் வெங்கட்ராமன் என் வகுப்புத் தோழன். படிப்பில் சூரன். அப்பா இல்லாததால், அவன் அம்மா அப்பளம் தயாரித்து, அதில் கிடைக்கும் சொற்ப வருமானத்தில் குடும்பத்தை ஓட்டினாள்.



பள்ளிக்கூட இறுதி யாண்டுத் தேர்வில் மதிப்பெண்களை வாங்கிக் குவித்திருந்தான் வெங்கட்ராமன். ஒரு சில தனியார் நிறுவனங்கள் தந்த உதவித் தொகையால் சென்னையில் படித்துப் பட்டம் பெற்றான். வெளிநாட்டில் கல்வி பயில மாணவர்களுக்கு நடத்திய தேர்வில் முதல் மாணவனாக வெற்றி பெற்றதால், அமெரிக்காவில் படிக்க உதவித் தொகையுடன் இடம் கிடைத்தது. படித்துக் கொண்டிருக்கும்பொழுதே அவன் அம்மாவை அமெரிக்காவுக்கு அழைத்துச் சென்று எல்லா இடங்களையும் சுற்றிக் காண்பித்துவிட்டு இந்தியாவுக்கு அனுப்பி வைத்தான். வயதான அவள் மறுவருடமே காலமாகி விட்டாள். இருப்பினும் ஆண்டுக்கு ஒருமுறை என்னைச் சந்திக்க இந்தியா வந்துவிடுவான். அவன் செய்யும் ஆய்வு, அதன் நுணுக்கங்கள், அவன் பெற்ற பாராட்டுகள் எல்லாவற்றையும் சொல்வான்.



மறுநாள் காலை சரியாக பத்து மணிக்கு நானும், வெங்கட்ராமனும் பல்கலைக்கழக அலுவலகத்துக்குச் சென்று விசாரித்தோம். "நேத்து நடந்த ஜெனடிக்ஸ் டிபார்ட்மெண்ட் லெக்சரர் போஸ்ட் தானே... முடிவு வந்துருச்சு. கே.ஆர்.செழியனுக்குக் கிடைச்சுருக்கு" என்று ஒருவர் சொன்னதும் அப்படியே இடிந்து போய்விட்டான் வெங்கட்ராமன்.

"ராஜ், இது என்ன கூத்து. அந்த செழியனுக்கு டாக்டர் பட்டம் இல்லை. ஆராய்ச்சிக் கட்டுரைகள் இல்லை. அவருக்கு எப்படிக் கிடைச்சது..."

அப்பொழுது ஒரு வயதான அலுவலர் எங்களிடம் வந்து "சார், வருத்தப்பட வேண்டாம். மூணு மாசத்துக்கு முன்னால இந்த லெக்சரர் வேலைக்கு பத்து லட்சம் விலைன்னு முடிவு செஞ்சுட்டாங்க. அந்த கே.ஆர்.செழியன் பேரம் பேசி எட்டு லட்சமா குறைச்சு அப்பவே பணம் கொடுத்து அந்த வேலையை வாங்கிட்டாரு. நேத்து

நடந்த நேர்முகத் தேர்வு வெறும் கண் துடைப்புதான்'' என்று சொல்லிச் சென்றார்.

"ராஜ், இவர் என்ன சொல்லிட்டுப் போறார். எனக்கு எதுவும் புரியல. வேலைக்கு விலையா! இது என்ன பொருளா? ஏதோ வீடு, நிலம் மாதிரி விலை பேசுறாங்க. கல்வி வியாபாரமா யிருச்சா?'' பதற ஆரம்பித்துவிட்டான் வெங்கட்ராமன்.

அவனைச் சமாதானப்படுத்தி வீட்டுக்குக் கூட்டி வந்தேன். 'இது என்ன கொடுமை. இது என்ன கொடுமை' என்று அவனிடமிருந்து ஒரே புலம்பல்.

"சோதனைக் கூடம், விஞ்ஞானிகளிடம் கலந்துரையாடல், ஆய்வுக் கட்டுரை வாசித்தல் இப்படி ஒரு வட்டத்துக்குள்ள பல ஆண்டுகள் இருந்துட்டே... உன் சூழல் அப்படி. அதனால வேலைக்கு விலைன்னு சொன்னதும் பதறித் துடிக்குற. வெங்கடா, நான் மட்டும் வசதியானவனாயிருந்தா எட்டு லட்சத்தைத் தூக்கி எறிஞ்சு அந்த வேலையை உனக்கே வாங்கித் தந்திருப்பேன். இந்த ஏழையால பணம் கொடுத்து உனக்கு உதவ முடியல. என்னை மன்னிச்சுக்கோ'' அவன் கரங்களைப் பிடித்துக் கொண்டு கண் கலங்கச் சொன்னேன்.

அவன், "ராஜ், இதுக்குப் போய் வருத்தப்படலாமா? பணம் இருக்கு ராஜ்... நிறைய இருக்கு'' என்றவன், அவனுடைய பெட்டியைத் திறந்து ஓர் அழகான தோல் பையை என் முன் கவிழ்த்தான். பொல பொல வென்று ஏராளமான தங்க மெடல்கள் அதிலிருந்து விழுந்தன. விளக்கு வெளிச்சத்தில் கண்ணைப் பறித்தன.

"ராஜ், என் திறமைக்கு வெளிநாட்டுப் பல்கலைக்கழகங்கள் கொடுத்த பதக்கங்கள். இந்தத் தங்க மெடல்களை குறைச்சு வித்தாலும் பத்து லட்சம் தேறும். ஒரு நொடியிலே வித்து பணத்தை எறிஞ்சுடலாம். ஆனா, விலை கொடுத்து வேலை வாங்கணுமா? அது கேவலமில்லையா? பின்வாசல் வழியே நுழைஞ்சு இருக்கையைப் பிடிக்கணுமா? சரி, பணம் கொடுக்க வழியில்லாத இளைஞர்களோட கதி.... படிச்சும் ஏழ்மைதானா... இந்தக் கேடு கெட்ட நிலைமைக்கு யாரு காரணம்'' பொங்கிப் பொங்கிப் பேசியவன், எதுவும் சாப்பிடாமல் படுத்துவிட்டான்.

மறுநாள் காலை எனக்கு முன்பே எழுந்து எங்கோ புறப்படத் தயாராயிருந்தான். "என்னப்பா எங்கே கிளம்பிட்ட?'' என்று நான் கேட்டதும் "ராஜ், எனக்கு மனசே சரியில்ல. கொஞ்ச நாள் எங்காவது வெளியூர் பயணம் போயிட்டு வர்றேன். என் பெட்டியிலே பாஸ்போர்ட், சர்ட்டிபிகேட்ஸ், தங்க மெடல்கள் எல்லாம் இருக்கு. என்னை நினைச்சுக் கவலைப்படாதே'' என்றவன் படியிறங்கிச் சென்றுவிட்டான்.

ஓர் ஆண்டுக்கு மேலாகியும் அவனிடமிருந்து செய்தியே வரவில்லை. ஒரு நாள் அவனிடமிருந்து கடிதம். ஆவலுடன் பிரித்துப் படித்தேன்.

'அன்பு ராஜ்,

நல்லாசிகள். என் மன அலையின் வேகமும் வீச்சும் அடங்கி அமைதி நிலையை அடைய இவ்வளவு நாட்களாகி விட்டன. கிழக்கே இயற்கை எழில் நிறைந்த காமரூபம், மேற்கே ஜீவநதியாம் சிந்து பாயும் கோதுமை வயல்கள், தெற்கே விவேகானந்தர் தவம் செய்த குமரி, வடக்கே பாரதி உலாவ அழைத்த பனி



"ஏங்க! சொர்க்கத்துலே கணவன் - மனைவி சேர்ந்து வாழ முடியாதாமே!''

"ஆமாம்! அதனால்தான் அது சொர்க்கம்.''

- என்.சண்முகம்

"ஒன்பது கிராம் தங்கம் நாயர் புதிருக்குப் போகுதுன்னு சொல்றாங் களே!"

"கேரள தங்க வேட்டையாச்சே!"

- புளியரை கணேசன்



மலைக் கூட்டம். இந்த நான்கு எல்லை களுக்கு மத்தியில் பரந்த என் பாரத மண்ணில் இவ்வளவு நாட்களும் நடந் தேன். நான் நீராடாத நதிகளே இல்லை. என் பாதம் படாத வழிபாட்டு ஸ்தலங் களே இல்லை. வறுமையோடு போராடும் என் இந்தியச் சகோதர, சகோதரிகள் போட்ட பிச்சை என் பசி போக்கியது. இமயமலைச் சாரலில் சில பரதேசிகளைச் சந்தித்தேன். எல்லோருமே பண்டிதர்கள். வேத விருட்சங்கள். அத்துறவிகளிடம் மனதைப் பறிகொடுத்து, நானும் அவர் களில் ஒருவனாகி விட்டேன். ராஜு, என் பெட்டியிலிருக்கும் பாஸ்போர்ட், சான் றிதழ்களைக் கிழித்து எறிந்துவிடு. அந்தத் தங்க மெடல்களை உருக்கி ஆபரண மாக்கிக் கொள். அவை உனக்கோ, உன் குழந்தைகளுக்கோ உதவும். இதுவே நான் எழுதும் கடைசிக் கடிதம்.

ஓம் சாந்தி........ சாந்தி.......... சாந்தி.

இப்படிக்கு
பரதேசி வெங்கட ராமானந்தா'

கடிதத்தை வாசித்து முடித்ததும் கதறிக் கதறி அழுதேன். அவன் பாஸ்போர்ட், சான்றிதழ்கள் தங்க மடல்கள் எல்லா வற்றையும் எடுத்து என் பூஜை அறையில் வைத்தேன்.

**கா**லம் ஒரு கைதேர்ந்த வித்தைக் காரன் போல் பகலையும், இரவையும் மாற்றிக் கொண்டிருந்தது. என் வயது ஐம்பதைக் கடந்துவிட்டது.

எனக்கு ஒரே ஒரு மகன். சரியான சோம்பேறி. எப்படியோ ஒவ்வொரு வகுப் பிலும் பல ஆண்டுகள் நிதானமாக இருந்து ஒரு பட்டமும் வாங்கிவிட்டான்.

அன்று ஒரு நேர்முகத் தேர்வில் கலந்து விட்டு வந்தவன் "அப்பா, அந்த வேலைக்கு எட்டு லட்சம் கொடுத்தா உடனே கிடைச்சுடும்னு சொல்றாங்க" என்றான்.

"எட்டு லட்சமா... நாம அதுக்கு எங்க போக..." நான் சொல்லி முடிப்பதற்குள் சரேலென்று சமையலறையிலிருந்து வந்த என் மனைவி, "எங்க போகவா... எங்கேயும் போக வேண்டாம். பூஜை அறையிலே வைச்சு சாம்பிராணிப் புகை போட்டு வர் றீங்களே... உங்க நண்பர் கொடுத்த தங்க மெடல்கள், அதை வித்து நம்ம பைய னுக்கு ஒரு நல்ல எதிர்காலத்தை அமைச் சுக் கொடுங்க. பெரிய அறிவாளி, விஞ் ஞானி அப்படி இப்படின்னு புகழுவீங் களே உங்க நண்பரை, அவரு புத்தியுள்ள வராயிருந்தா அன்னிக்கே இந்த மெடல் களை வித்து வேலை வாங்கி குடும்பஸ் தராயிருக்கலாம். அவரோட வறட்டுப் பிடிவாதத்தால் காவி கட்டி பண்டாரமா யிட்டாரு. இருக்காரோ செத்துட்டாரோ. ஆனா புண்ணியவான் சிநேகப் பாசத்துல இந்த மெடல்களைக் கொடுத்துட்டுப் போயிருக்காரே. அவரோட திறமைகள் அவருக்கு உதவல. நம்ம பிள்ளைக்கு உத வட்டும். 'என்னோட நண்பனின் மெடல் கள். தரமாட்டேன். நான் சாகுற வரைக் கும் சாம்பிராணி புகை போடுவேன்'னு பிடிவாதம் பிடிச்சா இப்பவே, நானும், என் பிள்ளையும் வீட்டை விட்டு வெளி யேறி எங்காவது போயி செத்து ஒழியறோம்" என்றாள்.

பதிலேதும் சொல்லாமல் பூஜை அறைக்குள் சென்று மெடல்களை எடுத் தேன். நான் ஒரு சராசரி இந்தியத் தகப் பன். எனக்கு எதற்கு பிடிவாதம்? ●

பட்டிதொட்டியெல்லாம் 'பட்டியல்' படம் பற்றிப் பேச்சாயிருக்க, தம்பதியர் சகிதமாக தமிழ் சினிமாவில் ஜெயித்தவர்களின் பட்டியலில் புதிதாக இணைந்துள்ளனர் விஷ்ணுவர்தனும் - அனுவர்தனும்.

"லயோலாவுல ரெண்டு பேருக்கும் ஒரே வகுப்பு. ஒரே அலைவரிசை. ரெண்டு பேர் குடும்பமும் ஃபேமிலி ஃப்ரெண்ட் ஸுங்கிறதால பழகறதுக்குத் தடையில்லை. கேக்கணுமா, அறிந்தும் அறியாமல் எங்களுக்குள் காதல் நுழைஞ்சிருச்சு. படிப்பு முடிச்சு நான் சந்தோஷ்சிவன்கிட்டே



• பட்டியல் குழு...

அஸிஸ்டெண்ட் டைரக்டரா வேலை செய்யக் கிளம்பிட்டேன். மணிரத்னம் சார் இவருக்

முடிச்ச கட்டி ஓடி வந்துட்டோம்" என்றவர் விஷ்ணுவைப் பார்த்து, "நானே பேசிக்கிட்டிருக்கேன்... பேசுங்களேன்" என்றார்.

"ஸ்கிரிப்ட்டை பக்காவா ரெடி பண்ணாம நான் ஷூட்டிங் ஸ்பாட்டுக்குள்ளே காலடி எடுத்து வைக்க மாட்டேன். 'பட்டியல்' ஸ்கிரிப்ட்டை உருவாக்க நாலு மாசம் ஆச்சு. அதற்கடுத்து நான் பண்ண காரியம், எடிட்டர் ஸ்ரீகர் பிரசாத்கிட்ட உட்கார்ந்து கதையையும் நான் எடுக்கப் போகிற காட்சிகளையும் பத்தி முழுமையா விவாதிப்பேன். அங்கேயே படத்தோட மேக்கிங், ஸ்டைல் எல்லாம் முடிவாயிடும். பிறகு சில ரெளடிகள்கிட்டே



எல்லா ஆண்களின் வாழ்க்கையிலும் பெண்களுக்குன்னு கட்டாயம் ஓர் இடமுண்டு: அதுதான் ரெண்டு ரெளடிங்களைப் பத்தின கதைக்குள்ளேயும் பத்மபிரியாவையும் பூஜாவையும் ரொம்ப அழகா நுழைய வைச்சது. அதேமாதிரி சயின்ஸ் ஃபிக்ஷன் படம் எடுத்தாலும் அதுல எமோஷன்ஸ் அவசியம். இது தப்பா போச்சுன்னா என்ன வித்தை காட்டினாலும் படம் தேறாது. எலெக்ஷன், தேர்வுகள், 'திருப்பதி' ரிலீஸ் போன்ற காரணங்களுக்காக

# அறிந்தும் அறியாமல் ஒரு காதல்!

குத் தெரிஞ்சவர். அவர்தான் சந்தோஷ் சிவன்கிட்டே இவரையும் அனுப்பினார். அங்கேயும் அதே காதல் தீ. ஆனா பாருங்க, ஒரு ஆணுக்குக் காதல் வந்தா, அதைத் தான் விரும்பின பொண்ணு கிட்டேதானே சொல்லணும். ஆனா இவர் நேரா எங்க அப்பா - அம்மாகிட்டே போய் தன் காதலைச் சொல்லி, எந்த ஹீரோயிஸமும் இல்லாம என் கரம் பிடிச்சுட்டாரு'' என்று அனுவர்தன் கலகலப்பாகப் பேச ஆரம்பிக்க, கண்ணாடி ப்ரேம் வழியே கண்ணடித்துச் சிரித்துக் கொண்டிருந்தார் விஷ்ணுவர்தன்.

அனுவர்தன் இருபத்துமூன்று வயதில் சந்தோஷ்சிவனின் வரலாற்றுப் படமான 'அசோகா'வில் காஸ்ட்யூம் டிசைனராக அறிமுகமாகி, மும்பையையே மிரட்டியிருக்கிறார். "நான் படிச்சது விஷுவல் கம்யூனிகேஷன். 'அசோகா' படத்துக்கான காஸ்ட்யூமுக்காக அலைஞ்சு திரிஞ்சு தகவல் சேகரிச்சபோது, 'பேசாம நீயே காஸ்ட்யூம் டிசைனரா பண்ணிடேன்'னு சந்தோஷ் சிவன் சார்தான் என் வாழ்க்கையைத் திசை திருப்பினார். சந்தோஷ் சிவன் சார்கிட்டே வேலை செஞ்சா சினிமாவையே கரைச்சுக் குடிச்சுடலாம். அவரோட சேர்ந்து நிறைய ஹிந்திப் படங்கள் பண்ணினாலும் நம்ம ஊர்ல படம் பண்ணணும்ங்கிற ஆசையிலதான் ரெண்டு பேரும் அங்கிருந்து மூட்டை

அதாவது சட்டப்படி தினமும் போலீஸ் ஸ்டேஷன்ல கையெழுத்துப் போடறவங்க கிட்டே போய் கதை சொன்னேன். அவங்க கொடுத்த துல்லியமான தகவல்கள்தான் திரைக்கதைக்கு ரொம்பவே உதவுச்சு. ரெண்டு ஹீரோ சப்ஜெக்ட் பலருக்கும் ஆச்சர்யமா இருக்கு. நட்பு பத்தி சொல்ல குறைஞ்சபட்சம் ரெண்டு பேராவது வேணுமே.. ஆர்யாவுக்கு கதை ஓ.கே. தான். பரத் ஆரம்பத்துல யோசிச்சாரு. அப்புறம் கதையை முழுசா கேட்டுத் தயாராயிட்டார். ரெண்டு பேர்கிட்டேயும் ஆரம்பத்துலேயே இதுதான் கதை, இந்தந்த காட்சிகளைத்தான் ரெண்டு பேரும் பண்றீங்கன்னு தெளிவா சொல்லிட்டேன். தேவையில்லாத சிக்கல்கள் உருவாகக் கூடாதில்லையா?

சொன்ன தேதிக்கு முன்னாடியே படத்தை ரிலீஸ் செஞ்சோம். டீ.வியில ஒரு கிளிப்பிங், பாடல் காண்பிக்கலை. ஆனாலும் ஸ்டெடியா போயிட்டு இருக்கு'' என்ற விஷ்ணுவர்தன், அடுத்து பாலா தயாரிக்கும் படத்தை இயக்கவிருக்கிறார். "என் படங்கள் ராவா இருக்கிறதால ராம்கோபால் வர்மாவோட ஒப்பிட்டுப் பார்க்கிறாங்க. எனக்குன்னு தனித்துவம் தேவை. அடுத்த படம் ரௌடிகளைப் பற்றி இருக்காது. ஆர்யா இருக்க மாட்டார். ரசிகர்கள் வித்தியாசமான படங்களை ரசிக்கத் தயாரா இருக்காங்க. ஃபிலிம் மேக்கர்ஸான நாமதான் அதுக்குத் தயாரா இருக்கணும்'' என்கிறார்.

- சநகன்




# நேருக்கு நேர்!

இந்தியாவிலேயே கோடைகால வாசஸ்தலங்களுக்குள், உதகமண்டலம்தான் தலைமை வகிக்கிறதென்பதில் சந்தேகமே இல்லை. ரயில்வே விளம்பரங்கள் அப்படித்தான் சொல்கின்றன.

நீலகிரியில் வசிப்பது தேகத்துக்கு ஆரோக்யமும், மனத்துக்கு உற்சாகமும் அளிக்க வல்லது. ஆனால், இதை நீங்கள் மறந்துவிடாமல் அடிக்கடி ஞாபகப்படுத்திக்கொள்ள வேண்டும். ஞாபகப்படுத்திக்கொள்ள அவசியமும் அடிக்கடி நேரும். போன புதிதில், பாதங்களின் ஓரங்கள் எல்லாம் வெடித்துவிடும். எப்போதும் காலுறை போட்டுக்கொள்ள வேண்டும். வெறுங்காலுடன் நடக்காமலும் வெகு ஜாக்கிரதையாக இருந்தால் தப்பலாம். அப்புறம், வயோதிகர்களுக்கு முழங்கால் முட்டில் பிடிப்பு வந்தாலும் வந்துவிடும். உதடுகளோ கோடைகால வயல்களைப் போல பிளந்து போகும். அப்போதெல்லாம் "ஆரோக்கியம்", "ஆரோக்கியம்" என்று உருப்போட்டுக்கொண்டிருந்தாலொழிய கஷ்டமாய்த்தான் இருக்கும். அதுபோலவே, இரவு நேரங்களில் குளிரால் நடுங்கிக்கொண்டு தூக்கம் வராமல் கஷ்டப்படும்போதும், "உற்சாகம், உற்சாகம்" என்று உச்சஸ்வரத்தில் கோஷிப்பது அவசியம்.

வெயிலும் வெப்பமும் தாங்காமல் குளிர்ச்சியை அனுபவிப்பதற்காகத்தான் எல்லோரும் நீலகிரிக்குப் போகிறார்கள். ஆனால் அங்கே போனதும் சிலர் உஷ்ணத்தைத் தேடி அலையத் தொடங்குகிறார்கள். சிலர் கணப்பு மூட்டிக் குளிர் காய்வார்கள்; அநேகர் பெரிய பெரிய தடிக் கம்பளிகளைப் போர்த்திக்கொண்டு நடுங்குவார்கள்.

இதெல்லாம் எனக்குச் சுத்தமாய்ப் பிடிப்பதில்லை. ஐயோ! குளிருகிறதே என்று மலையுச்சியில் வசிப்பவர்களுக்குத் தோன்றும் போதெல்லாம், அதேசமயத்தில் சமதரையில் சென்னை முதலான இடங்களில் உள்ள ஜனங்கள் வெயிலிலும் வெப்பத்திலும், எப்படித் தவிக்கிறார்கள் என்று நினைத்துக் கொள்ளட்டும். அப்போது ஒரு மாதிரி தானே உற்சாகம் வந்துவிடும்.

நீலகிரியில் குளிர் அதிகம் தெரியாமல் இருப்பதற்கு இன்னும் ஒரு முக்கியமான வழி உண்டு. ஓரிடத்தில் உட்கார்ந்திராமல் நடமாடிக் கொண்டேயிருக்க வேண்டும். வேகமாக நடந்துகொண்டேயிருந்தால் குளிர் தெரியாது. நடப்பதற்கு உற்சாகம் அளிப்பதற்கு வேண்டிய தூண்டுகோல்களும் ஏராளமாக இருக்கின்றன. ஊட்டியிலிருந்து எட்டு மைல் தூரத்தில் 'தொட்டபெட்டா' என்ற மலைச்சிகரம் இருக்கிறது. தென்னிந்தியாவில் இதுதான் மிகவும் உயரமான மலைச்சிகரம். அதில் ஏறி நின்று, "இந்த நிமிஷத்தில் இந்த நாட்டில் உள்ளவர்கள் அனைவரிலும் நானே உயர்ந்தவன்" என்று உண்மைக்கு மாறுபடாமல் ஒருவன் சொல்லிக்கொள்ளலாம்.

இன்னும் 'டைகர் ஹில்' என்ற ஒரு குன்று, ஊட்டிக்கு மூன்று மைல் தூரத்தில் இருக்கிறது. அங்கே 'டைகர் கேவ்' (புலிக் குகை) என்னும் பெயருடைய ஒரு குகையும் உண்டு. நீலகிரிக்குப் போகிறவர்கள் எல்லாரும் மேற்படி குன்றுக்குச் சென்று அந்தக் குகையைக் கட்டாயம் பார்த்து வர வேண்டும்.

நானும் இன்னும் மூன்று சிநேகிதர்களுமாக வெகு கஷ்டப்பட்டுத் தட்டுத் தடுமாறி அங்கே போய்ச் சேர்ந்தோம்.

முழங்கால் வலியைக்கூடப் பொருட்படுத்தவில்லை. அசல் காட்டுப்புலி ஒன்றை நேருக்கு நேர் பார்க்கப் போகிறோம் என்னும் ஆசைதான் அவ்வளவு உற்சாகமளித்தது. ஆனால் எவ்வளவு பெரிய ஏமாற்றம்! 'புலிக்குகை' என்னும் பெயர் சுத்த மோசடி என்று கண்டோம். அந்தக் குகையில் புலியே இல்லை; கிலிகூட இல்லை. பின் என்ன இருந்தது தெரியுமா? கன்னங்கரிய இருட்டு!

இருட்டு என்னமோ அபூர்வமான இருட்டுதான். அதன் அழகை வர்ணிக்கவே முடியாது. ஆனால் அவ்வளவு அழகான, அருமையான இருட்டை எதற்காக அவ்வளவு தூரத்தில் கொண்டு போய் ஒளித்து வைத்திருக்கிறார்கள் என்பதுதான் தெரியவில்லை! எங்கேயாவது சமீபத்தில், வெட்ட வெளிச்சமான இடத்தில் வைத்திருந்தால், கஷ்டமில்லாமல் வந்து பார்த்து சந்தோஷப்பட மாட்டோமா?

இந்த நிமிஷத்தில் இந்த நாட்டில் உள்ளவர்கள் அனைவரிலும் நானே உயர்ந்தவன்

தொட்டபெட்டா

மேலே நான் எழுதியிருப்பதெல்லாவற்றையும்விட, கொடைக்கானலைப் பற்றி நான் எழுதப் போவதைத்தான் நீங்கள் அதிகம் விரும்புவீர்கள். கேளுங்கள். கொடைக்கானலைப் பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது. அங்கே நான் போனதேயில்லை.

**- தாகூர் தரிசனம் புத்தகத்திலிருந்து... வானதி பதிப்பகம்.**

4 வாரத் தொடர்

# அழகி



எத்தனை முறை நினைத்துப் பார்த்தாலும், என் வாழ்க்கையின் மகத்தான ஆச்சர்யம் தேவியக்காதான்.

தேவியக்கா, சிறுவயதிலேயே எங்கள் பக்கத்து வீட்டுக்குக் குடிவந்த ஜோசியரின் மகள். என்னைவிட பத்து மாதம்தான் பெரியவள். இருப்பினும், தேவியின் அம்மா ஒரு முன் எச்சரிக்கை உணர்வுடன், "உன்னைவிட வயசுல பெரியவடா அவ. அக்கான்னு கூப்பிடு'' என்று சின்ன வயதிலிருந்தே பழக்கப்படுத்தி, ஒரு அழகான பெண்ணை, 'அக்கா' என்று அழைக்க நேர்ந்துவிட்ட துர்பாக்கியசாலி நான்.

நிற்க, இந்தக் கதையில் நான் ஒரு துணைபாத்திரம் மட்டுமே என்பதால், சுயபுராணத்தைத் தவிர்த்துவிட்டு, தேவியக்காவுக்கு வருகிறேன்.

தேவியக்கா, பன்னிரண்டு வருடங்களுக்கு முன்பு, தன் அபார அழகால், எங்கள் ஊர் வயசுப் பையன்களைப் பைத்தியமாக்கியவள்.

தெற்குரத வீதியில், கலகலவென்று பேசிக் கொண்டிருக்கும் பையன்கள் அமைதியானால், தேவி கடந்து கொண்டிருக்கிறாள் என்று அர்த்தம். அம்மன் கோயில் பூசாரி மகன், "மறைக்காதீங்க. பின்னாடி இருக்குறவங்களும் அம்மனைப் பார்க்க வேண்டாமா?'' என்றால், பின்னால் தேவியக்கா நிற்கிறாள் என்று அர்த்தம்.

தேவியின் அழகைக் கண்டு பிரமித்

தார்கள். அரசு பொது மருத்துவ மனை சுவர்களிலும், ஆயிரங் கால் மண்டபத்திலும் ஆளா ளுக்கு அபத்தமாக கவிதை எழுதினார்கள். சாம்பிளுக்கு ஒன்று :

என்னுயிர் தேவி
நீயே என் ஆவி
ஓடிவந்து தாவி
உன்னை அணைக்க முடி யாத பாவி.

இந்த ரேஞ்சில் பல கவிதை கள். அவற்றையெல்லாம் கூறி னால், நீங்கள் என்னை ஆள் வைத்து அடிக்கக்கூடிய சாத் தியக்கூறுகள் பலமாக உள்ள தால், இத்துடன் நிறுத்திக் கொள்கிறேன்.

அப்பொழுதெல்லாம் எங் கள் ஊர் இளைஞர்கள், ஊரி லுள்ள எல்லா ஃபிகர்களுக்கும் ஏதேனும் ஒரு சினிமா நடிகை யின் பெயரை இணைத்து பட் டப் பெயர் வைத்திருப்பார்கள்.

'சில்க்' ஸ்மிதாபோல் கவர்ச்சியாக, அதே சமயத்தில் சில்க்கைவிட சிவப்பான ஜோதியை, 'சிவப்பு சில்க்' என் பார்கள். கௌதமியைப் போன்ற தோற்றத்துடன், ஆனால் குள்ளமாக இருக்கும் உமாவை, 'குள்ள கௌதமி' என்பார்கள். இந்த வரிசையில் தேவியக்காவுக்கு 'தேரடித் தெரு குஷ்பு' என்று பெயர் வைத் திருந்தார்கள்.








தொண்ணூறுகளில், நடிகை குஷ்பு தனது அழகால், தமிழ் தேசத்து இளைஞர்களை மயக்கி வைத் திருந்த காலமது. தேவியக்கா ஏறத்தாழ குஷ்புவின் சாயலில் இருப்பாள். இருப் பினும் மேலவீதி கவிதாவும் குஷ்பு போலவே இருந்ததால், மேலவீதியில் வசித்து வந்த கவிதாவை 'மேலவீதி குஷ்பு' என்றும், தேரடித் தெருவில் வசித்து வந்த தேவியை 'தேரடித் தெரு குஷ்பு' என்றும் அழைப்பார்கள்.

அப்போது தேவியக்கா ப்ளஸ் ஒன் படித்துக் கொண்டிருந்தாள். நான் பத்தாவது. சிறு வயதிலிருந்தே நல்ல பழக் கம் என்பதால், நான் சகஜமாக அவர்கள் வீட்டுக்குச் சென்று வருவேன்.

ஒருநாள் தேவியக்கா, என்னிடம் கேட்டாள்.

"ஏன் பாபு... பசங்கள்லாம் எனக்கு ஏதோ பேரு வச்சிருக்காங்களாமே..." என்றாள்.

"ஆமாம்க்கா."

"என்ன பேரு?"

"தேரடித் தெரு குஷ்பு."

"நிஜமாலுமே நான் குஷ்பு மாதிரியா இருக்கேன்?" என்றாள் பெருமையுடன்.

"ம்... ஒரு சாயல்ல அப்படித்தான் இருக்க. ஆனா குஷ்புவை விட கலரும் ஜாஸ்தி, களையும் ஜாஸ்தி." என்றேன்.

தேவியக்காவின் முகம் முழுவதும், சந்தோஷத்தால் பூரிக்க, "நிஜமாவாடா சொல்ற?" என்றாள். "ஆமாம்க்கா குஷ்பு மேல சத்தியமா" என்று நான் கூறியவுடன், தேவியக்கா கண்ணாடி முன் நின்று, தன் முகத்தைப் பார்த்துக் கொண்டாள்.

திரும்பி என்னைப் பார்த்து, குஷ்பு பல படங்களில் செய்வது போல், இரண்டு கண்களையும், இறுக்கமாக மூடித் திறந்து, அழகாகச் சிரித்தாள்.

ஒரு நாள் நான் கடைத் தெருவுக்குச் சென்றுகொண்டிருந்த பொழுது, ரைஸ் மில் நாயுடுவின் மகன் பிரபாகர், டீக் கடையிலிருந்து என்னைக் கூப்பிட்டான்.

"டேய் பாபு... இங்க வாடா."

"என்னண்ணே...." என்று அருகில் சென்றேன்.

"மாஸ்டர்... பாபுவுக்கு ஒரு ஸ்பெஷல் மசாலா டீ போடுங்க. டேய்... ரெண்டு வடை எடுங்கடா" என்று பிரபாகர் கூற, பெஞ்சில் அமர்ந்திருந்த பிரபாகரின் நண்பர்களில் ஒருவன், இரண்டு வடையை எடுத்து என் கையில் திணித்தான்.

"எத்தனாவது படிக்குற பாபு?"

"பத்தாவது" என்றபடி வடையைக் கடித்தேன்.

"எத்தனாவது ரேங்க் வாங்குற?"

"செகண்ட் ரேங்க்."

"வெரிகுட். நான் ஒரு லெட்டர் தரேன். தேவிகிட்ட கொடுத்துடுறியா?"

"லவ் லெட்டரா? நான் கொடுக்க மாட்டேன்."

"இங்க பார்றா... பையன் விவரமாத்தான் இருக்கான். லவ்வுன்னா என்னான்னு தெரியுமா?"

"ம்... எத்தனை படம் பாத்துருக்கேன். ஒரு அக்காவும், அண்ணனும் லவ் பண்ணுவாங்க. அப்புறம் மரத்துக்குப் பின்னாடி போய்ட்டு, உதட்ட தொடச்சுக்கிட்டே வெளியே வருவாங்க. மரத்துக்குப் பின்னாடி என்னா பண்ணுவாங்க?" என்றேன் தெரியாதது போல். "ம்... திரை கட்டி, சினிமா காட்டுவாங்க" என்று பிரபாகர் கூற, அனைவரும் சத்தமாகச் சிரித்தனர்.

"ஏய்... சும்மா இருங்கடா. பாபு... அதெல்லாம் அப்புறம் சொல்றேன். நீ போய் இந்த லெட்டரைக் குடுத்தின்னா, ராத்திரி முனியாண்டி விலாஸ்ல பிரியாணி வாங்கித் தருவேன்."

முனியாண்டி விலாஸ் பிரியாணி எனது மூன்று வருடக் கனவு. யோசிக்காமல் உடனே, "சரி..." என்றேன்.

நான் தேவியின் வீட்டினுள் நுழைந்தபொழுது, தேவி அப்பா ஒரு பெரியவரிடம், "உங்க பையன் ஜாதகத்துல அஷ்டமத்துல சனி இருக்கு. ஒரு



"உங்க வீட்டில் திருடினவன் அந்தப் பணத்துல 'லைஃப் டைம் செல் கனெக்‌ஷன்'தான் வாங்கியிருப்பான்னு எப்படி உறுதியாச் சொல்றீங்க?"

"பீரோவிலிருந்த பணத்துல சரியா 999 ரூபாய்தானே குறையுது!"

- ஞா.ஞானமுத்து

''உன் காதலன், கட்டின புடைவையோடத்தானே வரச் சொன்னான்... நீ ஏன் இத்தனை புடைவைகளோட போற?''

''இதெல்லாம் நான் கட்டின புடைவைங்கடி...''

**- வீ. விஷ்ணுகுமார்**



ஸ்பெஷல் பூஜை பண்ணலன்னா, உங்க பையன் ஜெயிலுக்குப் போயிடுவான். இல்லன்னா பிச்சைக்காரனாயிடுவான்'' என்று பயமுறுத்திக் கொண்டிருந்தார். பெரியவர் மிரண்டு போய் உட்கார்ந் திருந்தார்.

நான், "அக்கா..." என்று அழைத்தபடி தேவியக்காவின் அறையினுள் நுழைந் தேன்.

"என்னடா?" என்று வரவேற்றாள் தேவி.

"நம்ம பிரபாகரண்ணன் இருக்காங் கள்ல?"

"எந்த பிரபாகர்?"

"ரைஸ் மில் நாயுடு மகன். உன்கிட்ட இதை கொடுக்கச் சொன்னாரு" என்று கடிதத்தை நீட்டினேன்.

தேவியக்கா கோபத்துடன் கடிதத்தை பிரித்துப் படித்தாள். நானும் பின்னா லிருந்து படித்தேன். 'என் இனிய தேரடித் தெரு குஷ்புவுக்கு,

ஐ லவ் யூ. உனக்காக ராத்திரி எட்டு மணிக்கு பெருமாள் கோயில் வாசலில் காத்துக் கொண்டிருப்பேன். சம்மதம் என் றால், எனக்குப் பிடித்த கருப்பு கலர் தாவணி போட்டுக்கொண்டு வா. இல் லன்னா ஒரு விஷபாட்டிலோடு வா. நீ இல்லன்னா நான் செத்துடுவேன். இது எங்கம்மா மேல சத்தியம்.

இப்படிக்கு
உன் அடிமை பிரபாகர்.'

பிரபாகர் ஓரளவு அழகாக இருப்பான். வசதியான குடும்பமும் கூட. தேவியக்கா, பிரபாகரின் காதலை ஏற்றுக்கொள்வாள் என்றுதான் நினைத்தேன்.

ஆனால் தேவியக்கா ஏளனமாகப் புன்னகைத்தபடி, பிரபாகரின் கடிதத்தை கிழித்துக்கொண்டே, "ஏன் பாபு... நான் எவ்ளோ அழகா இருக்கேன்?"

"ரொம்ப அழகு."

"ரொம்ப அழகுன்னா?"

"நான் பாத்த பொண்ணுங்கள்லயே நீதான் ரொம்ப அழகு."

"ம்... இவ்ளோ அழகா இருந்துக்கிட்டு, இவனைக் கட்டிக்கிட்டு, ரைஸ்மில்ல கூட்டிக்கிட்டிருக்கணுமா?"

"ஏன்க்கா... பிரபாகர் அழகாத்தானே இருக்காரு?"

"என்னத்த அழகு... கொஞ்சம் சிவப்பா இருக்கான். ஹைட் கூட கம்மிதான். நான் கட்டிக்கப் போறவன் எப்படி இருக் கணும் தெரியுமா?" என்றபடி ஜன்னலுக்கு வெளியே தெரிந்த வானத்தைக் கனவுடன் பார்த்தாள்.

"எப்படி?"

"நல்ல சிவப்பா, ஆறடி வரைக்கும் உயரமா, முகம் நல்லா பனிச்சுன்னு எண் ணெய் வடியாம, அடர்த்தியா தலைமுடி வச்சுக்கிட்டு, தெத்துப்பல்லெல்லாம் இல்லாம ரொம்ப அழகா இருக்கணும்."

''அரவிந்த்சுவாமி மாதிரி இருக் கணும்னு சொல்லு."

"ம்ஹூம்... அரவிந்த்சுவாமி முகம்கூட குழந்தைத்தனமா இருக்கு. இன்னும் நல்லா இருக்கணும்."

எனக்குத் தலை சுற்றியது. சமாளித்துக் கொண்டு, "அந்த மாதிரி கிடைப்பாங் களாக்கா?" என்றேன்.

"என் அழகுக்குக் கிடைப்பாங்க" என்ற தேவியக்காவைப் பார்த்து, சந்தேகத்துடன் தலையை ஆட்டினேன்.

*(தொடரும்)*

தாம் பயிரிட்ட தக்காளி, அமோக விளைச்சலைக் கொடுத்ததில் அந்த விவசாயிக்கு சந்தோஷம். லாரியில் சரக்கை ஏற்றிக்கொண்டு, பெங்களூர் மொத்த வியாபார மார்க்கெட்டுக்கு வந்தார். வந்தவருக்கோ பெரும் அதிர்ச்சி. ஏராளமான லாரிகளில் தக்காளி டன் கணக்கில் மார்க்கெட்டில் குவிந்திருந்தது. இவர் கொண்டு வந்த தக்காளியை வாங்க ஆளில்லை. மார்க்கெட்டில் தக்காளியை விற்று ஆயிரக்கணக்கில் லாபத்துடன் வீடு திரும்பலாம் என்று நினைத்துக்கொண்டு வந்தவருக்கு, சரக்கை விற்க முடியாமல் போனது மட்டுமல்ல; மறுபடி லாரியில் சரக்கை ஊருக்குத் திரும்பக் கொண்டு போக வேண்டுமென்றால், கைக்காசை செலவழிக்க வேண்டிய பரிதாபம். பார்த்தார்! மொத்த தக்காளியையும், கொண்டுபோய், மார்க்கெட்டின் குப்பை கொட்டுமிடத்தில் கொட்டிவிட்டு, ஊருக்கு பஸ் ஏறிவிட்டார்.

இது பெங்களூருக்கு மட்டுமல்ல, சென்னை மற்றும் இதர தமிழக நகரங்களுக்கும் பொருந்தும். கடந்த பத்துப் பன்னிரண்டு ஆண்டுகளாகவே தக்காளி விவசாயிகள் இந்தப் பிரச்னையைச் சமாளிக்க முடியாமல், திணறிக்கொண்டு இருக்கிறார்கள்.

# தக்காளி வீழ்ச்சி... தடுப்பது எப்படி?

• நாகராஜன்





இதற்கு என்ன காரணம், தீர்வு என்னவென்ற கேள்விகளுடன், விவசாய விஞ்ஞானி எஸ்.எஸ்.நாகராஜனைச் சந்தித்தோம். அவர் பிரச்னை, தீர்வு ஆகியவை குறித்து விரிவாகப் பேசினார்.

"தமிழ்நாடு வேளாண் பல்கலைக் கழகத்தின் ஆதரவில் செயல்பட்டு வரும் பெரியகுளம் தக்காளி ஆராய்ச்சி மையம், சுமார் பத்தாண்டுகளுக்கு முன் பி.கே.எம்-1 (பெரியகுளம் என்பதன் சுருக்கம்) என்ற தக்காளி ரகத்தை உருவாக்கியது. இதைத்தான் நாட்டுத் தக்காளி என்று சொல்வார்கள். சற்று புளிப்புச் சுவைகொண்ட இந்தத் தக்காளியை, கிராமப்புறங்களில், புளிக்குப் பதிலாக சமையலில் பயன்படுத்துவார்கள்.

ஒரு ஏக்கரில் பயிரிட்டால் ஒன்றரை டன் வரை இந்த நாட்டுத் தக்காளி விளையும். விவசாயிக்குத் துளியும் ரிஸ்க் இல்லாத இந்த நாட்டுத் தக்காளி, ஏக்கருக்கு இரண்டாயிரம் ரூபாய் வரை லாபம் ஈட்டித் தரும். உற்பத்திச் செலவும் குறைவு.

ஆனால், ஒட்டு வீரிய தக்காளிச் செடிகள், பத்தாண்டுகளுக்கு முன் மேற்கத்திய நாடுகளிலிருந்து இங்கு வந்தன. இதனைப் பயிரிட்டால், ஏக்கருக்கு பத்தாயிரம் ரூபாய் வரை லாபம் கிடைக்கும். எனவே, ஏராளமான விவசாயிகள், நாட்டுத் தக்காளிக்குப் பதில் இந்த ஒட்டு வீரிய தக்காளியைப் பயிரிடத் தொடங்கிவிட்டனர். இதனால் தக்காளி ஏராளமாக உற்பத்தியாகி விலை வீழ்ச்சியடையத் தொடங்கிவிட்டது. இதனால் பாதிப்புக்குள்ளாவது விவசாயிதான். இந்தப் பிரச்னை கடந்த சில ஆண்டுகளாக இருந்து வருகிறது. அரசாங்கம் இதனைத் தீர்க்க உரிய நடவடிக்கை எதுவும் எடுக்கவில்லை என்பதுதான் சோகம்.

பஞ்சாபில், உருளைக்கிழங்கும் தக்காளியும் சீசனில் அபரிமிதமாக விளைகின்றன. இவை தேவைக்கு அதிகமாக இருந்தபோதிலும், அங்கே எந்தவிதமான பிரச்னையுமில்லை. காரணம், சீசனில் விளைகிற இவற்றை, பாதுகாப்பாக, கெடாமல் பத்திரப்படுத்தி வைக்க குளிர்சாதன கிடங்குகள் ஏராளமாக இருக்கின்றன. அங்கே அதிகப்படியான உருளைக்கிழங்கையும், தக்காளியையும் ஓராண்டு வரை கூட கெடாமல் பாதுகாக்க முடியும்.

பின் அவற்றிலிருந்து ஜூஸ் கான்சன்ட்ரேட், சாஸ், கெட்ச்-அப் போன்றவை தயாரிக்கப்படுகின்றன. இதனால் ஆண்டு முழுவதும் தக்காளி, உருளைக்கிழங்குக்குத் தேவை இருக்கிறது.

தவிர, பதப்படுத்தும் தொழிற்சாலைகள் அங்கே இருப்பதால், தக்காளியும், உருளைக்கிழங்கும் மார்க்கெட்டில் சீரழிவதில்லை!

ஆகவே, தமிழ்நாடு அரசாங்கம் குளிர்சாதன கிடங்கு வசதிகளுக்கு அனுமதி வழங்க வேண்டும். அதுபோல, பதப்படுத்தும் தொழிற்சாலைகளை கணிசமான எண்ணிக்கையில் உருவாக்க வேண்டும். அப்போதுதான் இந்தப் பிரச்னை தீரும்!"

**- எஸ்.சந்திரமௌலி**


ரோமியோ

## வெளிச்சம்!

'சித்திரம் பேசுதடி' படம் இயக்குநருக்கு மட்டுமல்ல, இந்த இளைஞருக்கும் வெளிச்சத்தைத் தந்திருக்கிறது. படத்தின் ஒரிரு காட்சிகளில் வந்தாலும் ரசிகர்கள் மனத்தில் ஒட்டிக்கொண்டு விட்டார் ரோமியோ. நிஜப்பெயர் சுப்பு. வேலூரைச் சேர்ந்தவர். வாய்ப்புகள் வந்தவண்ணமிருக்கின்றன. ஆஜானுபாகுவான தோற்றம்தான் காரணமென்கிறவர், 'எல்லாப் புகழும் இயக்குநர் மிஸ்கினுக்குத்தான்' என்கிறார்.

# கம்ப்யூட்டர் இல்லன்னா நான் காலி!

மதுரா... இருபத்தொரு வயது சாஃப்ட்வேர் இன்ஜினீயர். அலுவலகத்துக்குக் கிளம்பிக்கொண்டே நம்மிடம் பேசினார்.

"நான் சாஃப்ட்வேர் இன்ஜினீயர் ஆவேனென்று எண்ணியது கிடையாது. நான் திருச்சியில் படித்தது பி.எஸ்.சி கணிதம். கணித அறிவைக்கொண்டு மன்மோகன்சிங் மாதிரி பொருளாதார மேதையாக வர எண்ணினேன். பொதுவாக கணிதம் பயில்பவர்களுக்கு லாஜிக் அத்துப்படி. எனவே சாஃப்ட்வேர் கம்பெனிகளில் எங்களைப் போன்றவர்களுக்கு வாய்ப்புகள் அதிகம். கல்லூரிப் படிப்போடு பிரபல தனியார் கணினி கல்வி நிலையத்தில் C++ என்கிற கணினி மொழியையும் படித்தேன். எங்கள் கல்லூரியில் விப்ரோ நிறுவனத்திலிருந்து கேம்பஸ் இண்டர்வியூ நடத்தினர். மாணவர்களை வேலைக்கு எடுத்துக் கொள்வதோடு, கூடவே நான்கு வருடம் எம்.எஸ் படிக்கவும் இலவசமாக ஏற்பாடுகள் செய்வதாகக் கூறினார்கள். அடடா... இது அபூர்வ வாய்ப்பாயிற்றே! ஆங்கில அறிவும் கம்யூனிகேஷன் திறனையும் பலமாகச் சோதித்தனர். ஏட்டறிவும் ஆங்கிலப் புலமையும் இல்லாவிட்டாலும்கூட சொல்ல வருவதைத் தெளிவாகச் சொல்லத் தெரிகிறதா என்று தீவிரமாகப் பரிசோதித்தனர். நான் அனைத்திலும் தேறி சென்னைக்கு வண்டியேறினேன்.

அமெரிக்காவுக்கு ஒரு சிலிக்கான் வேலி (Silicon Valley) என்றால், சென்னைக்கு ஒரு சோழிங்கநல்லூர். அலுவலகத்துக்குள் நுழைந்து விட்டால் வெளியே சுனாமி வந்தாலும் தெரியாது. குளிரூட்டும் அறையில் அவரவர் விரல்கள் மும்முரமாக கீபோர்டைத் தட்டிக் கொண்டிருக்கும். வாரம் ஐந்து நாட்கள் வேலை. சனி, ஞாயிறு விடுமுறை (வேறு எந்த வேலையிலாவது இந்தச் சுகம் உள்ளதா?). என்னைப் போன்றவர்களுக்கு மட்டும் சனிக்கிழமைகளில் எம்.எஸ் படிப்புக்கான டிரைனிங். பெரிய சாஃப்ட்வேர் கம்பெனிகளில் புதிதாக வேலைக்குச் சேர்பவர்களுக்கு அலுவலகத்தில் அடிக்கடி தேர்வுகள் நடத்தப்படும். அதில் எண்பது சதவிகிதம் எடுத்தால் மட்டுமே வேலையில் தொடர முடியும்.

வீட்டு வாசலுக்கு வந்து அழைத்துச் செல்ல கம்பெனி வண்டி வரும். இல்லாவிட்டால் சிறும் பைக்கிலோ அல்லது சான்ட்ரோ காரிலோ ஜம்மென்று அலுவலகம் வருவார்கள் (25 வயதிலேயே சொந்தமாக கார் வாங்குபவர்களெல்லாம் இந்தத் துறையில்தான் அதிகம்). வேலை நேரம் 8.30 முதல் 6 மணி வரைக்கும்தான். ஆனால் பல சமயங்களில் இரவு 12 மணி வரைக்கும் வேலை செய்ய வேண்டியிருக்கும். அமெரிக்காவில் அப்பொழுதுதானே பகல்பொழுது. பேச்சிலர்ஸ் எல்லாம் இருபத்துநான்கு மணி நேரமும் கம்ப்யூட்டரையே கட்டி அழுவார்கள். ஆனால் எங்களுக்குக் கொடுக்கப்படும் கண்டிப்பான அறிவுரை என்ன தெரியுமா? 'மெனக்கெட்டு, தப்பும் தவறுமாகப் பல மணி நேரங்கள் வேலை செய்வதைவிட புத்திசாலித்தனமாக, ஸ்மார்ட்டாக எட்டு மணி நேரங்கள் உழைத்தாலே போதுமானது' என்பதுதான். எப்பொழுது வேண்டுமானாலும் கம்பெனியின் க்ளையண்ட் அழைப்பின்பேரில் அமெரிக்கா, ஜெர்மனி, ஜப்பான் போன்ற நாடுகளுக்குச் சென்று சிறிது காலம்

வேலை செய்ய வேண்டி வரும். அந்தச் சமயங்களில் க்ளையண்ட் தரும் சம்பளம் உட்பட இரு சம்பளம் கிடைக்கும்.

நாள் முழுக்க ஆடாமல் அசையாமல் வேலை செய்வதால் உடல் பருத்துவிடும். முதுகு வலி, கழுத்து வலி ஏற்படும். கண் அம்பேல். 'தெளிவாக' சென்னைக்கு வந்த நான், இன்றைக்கு பவர் க்ளாஸ் போட வேண்டிய நிலைக்கு ஆளாகி விட்டேன். மருத்துவரின் அறிவுரைப்படி இப்பொழுதெல்லாம் நான் வேலைக்கு இடையே அவ்வப்போது வெளியே எழுந்து சென்று பத்துப் பதினைந்து நிமிடங்கள் நடக்கிறேன். 'பச்சைப் பசேல்' பொருட்களைப் பார்க்கிறேன். அலுவலகத்திலேயே ஜிம் மற்றும் விளையாட்டுக் கூடங்களும் உள்ளன. பொழுதுக்கும் கம்ப்யூட்டரிலேயே வேலை செய்வதால் எழுதும் பழக்கமே அருகிவிட்டது. போன்நம்பர் குறித்துக்கொள்ளக்கூட கீபோர்டின் உதவி தேவைப்படுகிறது. கம்ப்யூட்டர் இல்லையென்றால் நான் காலி.

வேலைப் பளுவிலிருந்து எங்களை மீட்டு உற்சாகமூட்ட அலுவலகத்தில் கல்ச்சரல் போட்டிகள் எல்லாம் நடக்கும். நான்கூட என் பிறந்த நாளன்று அலுவலகத்தில் ஒரு கர்நாடக சங்கீத பாட்டுப் பாடினேன். அவ்வப்பொழுது கிஷ்கிந்தா, எம்.ஜி.எம் என தீம் பார்க்குகளுக்கு அழைத்துச் செல்வார்கள். ஒரே கம்பெனிக்குள் வேலை செய்பவர்கள் அப்படியே காதலித்துத் திருமணம் செய்துகொள்வது இப்பொழுதெல்லாம் அதிகமாகிவிட்டது. வயதானவர்களை இங்கு காண்பது அரிது. சாஃப்ட்வேரில் வேலை செய்பவர்களின் சராசரி வயதே இருபத்தெட்டுதான். இந்தத் தொழிலில் காலத்துக்கும் படிக்க வேண்டியிருக்கும். நாளுக்கு நாள் ஏற்படும் மாற்றங்களை அறிந்து கொள்ளாவிட்டால் பின்தங்கிவிடுவோம். இன்னொரு மன்மோகன் சிங் ஆகாவிட்டாலும் இன்னொரு லேடி பில்கேட்ஸாகவாவது ஆக வேண்டும் என்று எண்ணுகிறேன், பார்ப்போம்."

- ச.ந.கண்ணன்

படம்: ஓம்



* மதுரதா

# வாழ்வின் வண்ணங்கள்!

இந்தத் தொடரின் தொடக்கத்தில், வானவில்லுக்கும் வாலிபத்துக்கும் இருக்கிற பொருத்தங்கள் பற்றிப் பேசத் தொடங்கினோம். இந்த நிறைவு அத்தியாயத்தில் வானவில்லுக்கும் வாழ்க்கைக்கும் இருக்கிற பொருத்தங்கள் பற்றிப் பேசவோம். அதற்காகவே இரண்டு அழகான கதைகள் சொல்லப் போகிறேன். முதலாவது, காதில் விழுந்த கதை. இரண்டாவது எனக்குள் எழுந்த கதை.

வானவீதியில் நின்றுகொண்டு சில நிறங்கள் தங்களுக்குள் மோதிக்கொண்டிருந்தன. பச்சை பேசியது, "நிறங்களின் தலைவன் நான்தான். பசுமையே உலகின் தலைமை. நானில்லையேல் தாவரங்கள் இல்லை. தாவரங்கள் இல்லையேல் உயிரினங்கள் இல்லை."

நீலம் நகைத்தது. "பூமி என்கிற குறுகிய வட்டத்திற்குள் பார்க்காதீர்கள். ஆகாயப் பரப்பில் வியாபித்திருப்பது நான்தான். ஆழ்கடலை ஆள்வது நான்தான். எல்லைகளே இல்லாத தன்மை என்னுடையது."

மஞ்சள் மறுத்தது. "உயிர்களின் விருப்பம் சந்தோஷம். சந்தோஷத்தின் வண்ணமே நான். சூரியன் என் நிறம். சூரியகாந்தியும் என் நிறம். என்னைப் பூசிய பெண்ணை உலகம் அழகென்று கொண்டாடுகிறது."

ஆரஞ்சு ஆர்ப்பரித்தது. "அபூர்வமான நிறம் நான். ஊட்டச்சத்து தரும் பழங்களின் நிறம் நான். புலர்காலையிலும் இளமாலையிலும் ஆகாயத்தை ஆட்சி செய்வது நான்தான். நானே ஆரோக்கியத்தின் அடையாளம்."

சிவப்பு சிரித்தது. "வாழ்வின் ஆதாரம் இரத்தம். இரத்தமே என் நிறம். வாழ்வின் அனைத்து சக்திகளுக்கும் நானே மூலம். ரசனையின் நிறம் நான்தான்.

வயலட் சொன்னது. "உலகில் ஒரு நிறமாக மட்டுமின்றி ஊடுருவும் கதிராகவும் உள்ளேன். அதிகாரத்தின் சின்னம் நான். மற்றவரைப் பணிய வைக்கும் மன்னர்கள் என்னையே தங்கள் விருப்பமாய்த் தேர்ந்தெடுக்கிறார்கள்."

இண்டிகோ எதிர்த்தது. "என் மௌனம் ஆழமானது. வாழ்வின் அர்த்தங்களைக் கடந்த தெளிவே மௌனம். பிரார்த்தனைக்கும் தியானத்துக்கும் பொருளாக நிற்பது நான்."

நிறங்கள் தங்களுக்குள் சண்டையிட்டுக்கொண்டன. வாக்குவாதங்கள் வலுத்தன. ஆகாயம் ஆக்ரோஷமாய் இடிக்குரலில் உறுமியது. மேகமென்ற அம்பறாத் துணியிலிருந்து மழை அம்புகள் சரசரவென்று புறப்பட்டன. நிறங்கள் நடுங்கின. தங்கள் பேதங்கள் மறந்து ஒன்றையொன்று பற்றி நின்றன.

மழை மெல்ல முணுமுணுத்தது. "நிறங்கள் என்பவை வாழ்வின் விதம்விதமான வெளிப்பாடுகள். கூட்டு நிறங்களின் கலவைதான் அழகு. தனித்தனியாய் நிற்பதைவிட, தழுவி நிற்கும்போது நீங்கள் எவ்வளவு அழகு தெரியுமா? அங்கே பாருங்கள்"

அருகில் இருந்த அருவியில் முகம் பார்த்த நிறங்கள், தங்கள் கூட்டணிக்கு 'வானவில்' என்று பெயர் வைத்துக் கொண்டன.

# மரபின் மைந்தன் முத்தையா



மனித மனமும் அப்படித்தான். பல்வேறு நிறங்கள் போல் பல்வேறு திறமைகள் ஒவ்வொரு மனிதனுக்குள்ளும் ஒளிந்திருக்கின்றன. அறிவு, முடிவெடுக்கும் தெளிவு, செயல்படுத்தும் சக்தி, அரவணைத்துப் போகும் இயல்பு, மனித நேயம், விட்டுக் கொடுத்தல், மதித்தல் போன்ற வண்ணங்களால்தான் வாழ்க்கை அழகாகிறது. ஒற்றை நிறம் மட்டும் வானவில் ஆவதில்லை. ஒருங்கிணைக்கப்படாத திறமைகள் வெற்றி பெறுவதில்லை.

பரந்த பார்வையும் விரிந்த உள்ளமும் வாய்க்கப் பெற்ற வாழ்க்கைதான் வண்ணங்களால் நிரம்பிய வாழ்க்கை. சின்னஞ்சிறிய கூட்டை, உறங்குவதற்கு மட்டுமே பயன்படுத்தும் பறவை, ஆகாயம் முழுவதையும் சொந்தம் கொண்டாடுகிறது. மனிதப் பறவைகளுக்குத்தான் கூடுகள், கூண்டுகளாகிவிட்டன.

சுயநலத்துக்குள் சிறைப்படும் வரையில் சுயமறிய முடியாது. இனி உங்களுக்கொரு ரகசியம் சொல்லப்

வானவில் வயசு 14



"இரண்டு பேருமே வாஷ் பேஷின் பக்கம் நின்னுக் கிட்டிருந்தா எப்படி? யாராவது ஒருத்தர் வந்து பில்லுக்குப் பணம் கொடுங்க சார்."

- ஆர். சம்பத்

போகிறேன்.

கடவுள் உலகத்தைப் படைத்த போது, அது கறுப்பு வெள்ளையாகத் தான் இருந்தது. ஆமாம்! அந்த உலகத்தில் கடவுளும் குழந்தைகளும் மட்டுமே இருந்தனர். தினமும் காலையில் கடவுள் கிளம்பி அவருடைய அலுவலகத்துக்குப் போய்விடுவார். குழந்தைகளுக்குப் போரடித்தது. மாலையில் திரும்பும் கடவுளின் கால்களைக் கட்டிக்கொண்டு குழந்தைகள் சிணுங்கின. கடவுள் மறுநாள் வியர்வை வழிய உழைத்து உலகின் மிகப்பெரிய கலர் பென்சில் டப்பாவை உருவாக்கினார். வேறேதுமில்லை. வானவில்தான் அது.

அதற்கும் அடுத்தநாள், அலுவலகம் போகும் முன்னால் குழந்தைகளின் கைகளில் வானவில்லைத் தந்துவிட்டுப் போனார் கடவுள். மாலையில் திரும்பி வந்து பார்த்தவர் ஆச்சரியத்தில் ஆழ்ந்தார். அவர் படைத்த உலகம் வண்ணமயமாகியிருந்தது. ஆகாயத்துக்கு நீல நிறம், பூமிக்குப் பழுப்புநிறம், ரோஜாக்களுக்கு சிவப்பு நிறம், சூரியனுக்கு மஞ்சள் நிறம் என்று தங்கள் கைவரிசையைக் காட்டியிருந்தனர் குழந்தைகள்.

உலகமே வண்ணமயமாய் இருந்தது! குழந்தைகள் மேலும் வண்ணத் தீற்றல்கள்! கடவுள் மட்டும் கறுப்பு வெள்ளையில் இருந்தார்! அவருக்கு சந்தோஷம் பிடிபடவில்லை! தன் விஸ்வரூப உயரத்திலிருந்து கஷ்டப்பட்டுக் குனிந்து குழந்தைகளுடன் கைகுலுக்கிப் பாராட்டினார். அப்போது ஒரு குழந்தை ஓடி வந்து குனிந்திருந்த கடவுளின் கன்னத்தில் முத்தமிட்டது. என்ன அதிசயம்! கறுப்பு வெள்ளையில் இருந்த கடவுள் வண்ணமயமாய் மாறினார். குழந்தைகள் கைதட்டி ஆர்ப்பரித்தன.

அவர்களை அமைதிப்படுத்தி விட்டுக் கடவுள் சொன்னார், "குழந்தைகளே! நீங்கள் கைகளில் ஏந்திய வண்ணங்களைக் கொண்டு வெளி உலகத்துக்கு வண்ணம் தீட்டினீர்கள்! உங்களில் ஒரு குழந்தை என்னை முத்தமிட்டதும் நான் வண்ணமயமாகிப் போனேன். எப்படித் தெரியுமா? எல்லோரும் பார்க்கும் விதமாக வண்ணங்களைப் படைத்த நானே, ஒவ்வொருவருக்குள்ளும் கண்ணுக்குத் தெரியாத வண்ணங்களையும் வைத்திருக்கிறேன். வாழ்கிற ஒவ்வோர் உயிருமே வானவில்லுக்குச் சமம். உங்களுக்குள் உள்ள கண்ணுக்குத் தெரியாத வண்ணங்கள் பலவிதம். அன்பு, கருணை, பொறுமை, அமைதி, இன்சொல் என்று அவற்றுக்கு எத்தனையோ பெயர்கள். இந்த அக வண்ணங்களை அள்ளிப்பூசி, இந்த உலகத்தை மேலும் அழகாக்குங்கள். உங்கள் ஒவ்வொருவருக்கும் உள்ள கடமை இது" என்றார் கடவுள்.

வாழ்வை அழகாக்கும் வண்ணங்கள் நமக்குள் இருக்கின்றன. நம் திறமையால் முதலில் நாம் வளர்கிறோம். பிறகு நம்மால் உலகம் வளர்கிறது. நண்பர்களே! இந்த வளர்ச்சிப் பாதையில் வலது கால் வைத்து வாருங்கள். வழியெங்கும் வானவில் வளைவுகளை வைத்து வாழ்க்கை உங்களை வரவேற்கிறது.

(நிறைந்தது)

# “உழைச்சாதான் சாப்பாடு எறங்கும்!”

“சார், வந்து ஒரு சொம்பு கூழ் குடிச்சுட்டுப் போ சார்...” சாலையில் செல்லும் நாய்க்குட்டியையும்கூட திரும்பிப் பார்க்க வைக்கும் பெருங்குரலும் அண்டா நிறையக் கூழும்தான் அந்தத் தொழிலின் மூலதனம். சென்னை சாலைகளில் பரவலாக இந்தக் கோடைகாலத்தில் தென்படத் துவங்கியிருக்கும் கூழ் கடைகளில் நாம் பார்த்த முகங்கள், பெரும்பாலும் வறுமைக்கு வாழ்க்கைப்பட்டவைதான். வள்ளுவர்கோட்டமருகே கூவிக் கூவி கூழ் விற்றுக்கொண்டிருந்த ஜெயகாந்தியிடம் பேச்சுக் கொடுத்தோம்.

“எப்படிப் போகுது இந்த வியாபாரம்?”

“ஏதோ போய்க்கிட்டிருக்குங்க... உங்கள மாதிரி நாலு பேரு வந்து குடிச்சாத்தான் எங்களுக்குப் பொழப்பே... ஒரு நாளைக்கு அம்பது, நூறுன்னு ஏதோ கிடைக்குது. அதுவும் இன்னும் ரெண்டு மாசம்தான். அதுக்கப்புறம் வேற ஏதாவது செஞ்சுதான் பொழைப்ப ஓட்டணும். வீட்ல சும்மா இருக்கிறது நமக்குப் புடிக்காதுங்க. ஏதாவது வேலை செஞ்சு உழைச்சாதான் அன்னைக்கு சாப்பிடுற சாப்பாடு உள்ளே எறங்கும்”

“சென்னை தான் சொந்த ஊரா?”

“நமக்கு திருவண்ணாமலைங்க. எனக்குக் கல்யாணம் ஆகி 35 வருஷமாயிடுச்சு. அதிலிருந்து சென்னையிலதான் இருக்கேன். கிட்டத்தட்ட நாலு வருஷமா இந்தத் தொழிலை செஞ்சுக்கிட்டிருக்கேன்.”

“ரோட்ல விக்கறீங்க... எல்லாத் தரப்பு மக்களாலயும் இந்தக் கூழ் விரும்பப்படுதா?”

“என்ன அப்படிச் சொல்லிப்புட்டீங்க... கார்ல போறவங்க, களைப்பா நடந்து போறவங்க, ஸ்கூல்ல படிக்கிற புள்ளைங்க எல்லாருமே என்னோட கஸ்டமர்தான். கேழ்வரகு, நெய், தயிர், பருப்பு வகைங்க, ஊறுகாய், மாங்காய் வடுன்னு டேஸ்ட்டா குடுக்கிறதால ஒரு தடவை சாப்பிட்டவங்க கண்டிப்பா இன்னொரு தடவையும் வந்து குடிப்பாங்க.

ஒரு சொம்பு குடிச்சாப் போதும்... சாப்பாடே தேவையில்லை. எனக்கு இந்தத் தொழிலைச் செய்யும்போது, பசியால வர்றவங்களுக்கு வயிறார உணவு கொடுக்கிற மாதிரி மன திருப்தியும் கிடைக்குது”

- மனோ சௌந்தர்

படம்: மீனம் மனோ



**சேனல்**

# "அட, நான் இப்ப ஹீரோவாயிட்டேன்!"

**விஜய்** டி.வி. பார்ப்பவர்களுக்கு மனோகரைத் தெரியாமல் இருக்காது. மனோகரைத் தெரிந்தவர்களுக்கு அவரது கரங்களைப் பிடிக்காமல் போகாது. அத்தனை அழகு அவர் கைகளைச் சுழற்றி 'லொள்ளு சபா'வில் கலாய்ப்பது.

"நமக்கு ராயபுரம்தான் உருண்டு புரண்ட இடம். பத்தாவது படிக்கும்போது பொன்னிவளவன்னு ஒரு தமிழ் வாத்தியார் என் ரத்தத்துல தமிழைக் கலந்துட்டுப் போயிட்டாரு. அதிலிருந்து கதை, திரைக்கதை எழுதி நாமும் தமிழுக்குச் சேவை செய்யணும்னு பைத்தியமாக் கிடந்தேன். ஒரு சைக்கிள் கடையில் 'நாடகத்தில் நடிக்க ஆட்கள் தேவை'ன்னு போர்டு மாட்டியிருந்தது. அங்கே போய் 'நாடகம் டைரக்ட் பண்ண சான்ஸ் கொடுங்க'ன்னு கேட்டேன். அங்கிருந்தவர் என்னை அழைச்சிட்டுப் போய் நாடகத்துக்கு டிக்கெட் கிழிக்க வுட்டுட்டாரு. அதே நாடகத்துல சின்ன ரோலும் பண்ணினேன். அப்படியே நாடக உலகமே என் வாழ்க்கையாயிடுச்சு. கேப்ல சினிமா சான்ஸும் தேடினேன். ஒருத்தரும் என்னை மதிக்கலை. நடுவுல கார்ப்பரேஷன் பேங்குல வேலை கிடைச்சுது. அக்கடான்னு கல்யாணமாகி செட்டிலாயிட்டேன்.



98-ம் வருஷத்திலிருந்து விஜய், ஜெயா டி.வி.கள்ல தொடர்ந்து காமெடி நிகழ்ச்சிகள் பண்ண வாய்ப்புக் கிடைச்சுது. ஆனா ஒன்றரை வருஷத்துக்கு முன்னாடி விஜய் டி.வி.யில ஆரம்பிச்ச 'லொள்ளு சபா'தான் என் இத்தனை வருஷ போராட்டத்துக்குமான விடிவு காலம். என்னை ஊர், உலகத்துக்கு கைகாட்டின நிகழ்ச்சி அது.

ரீசண்டா நடிகர் சரண்ராஜ், காலேஜ் பசங்ககிட்ட ஒரு சர்வே எடுத்ததுல 'லொள்ளு சபா மனோகர்தான் எல்லோருக்கும் பிடிச்ச டி.வி. நடிகர்'ங்கிற ரிசல்ட் கிடைச்சுருக்கு. உடனே அவர் தயாரிக்கிற 'புதுசா இருக்கு'ங்கிற படத்துல என்னை ஹீரோவாக்கிட்டாரு. ஜோடி - சூப்பர் டென் ஆர்த்தி. ப்ச்... ஆனா படத்துல ரெண்டு பேருக்கும் டூயட் ஏதும் இல்ல.

இதோ படம் ரிலீஸாகப் போகுது. படம் பார்த்த டிஸ்ட்ரிபியூட்டர்ஸ் என்னைக் கூப்பிட்டு, 'தம்பி, படம் அபாரம். கட்டாயம் ஐம்பத்திரெண்டு நாள் ஓடும் (!). உனக்கு ஆறு படம் புக் ஆகும்'னு கணக்கெல்லாம் போட்டு வாழ்த்தினாங்க. என் நாற்பத்தஞ்சு வருஷ வாழ்க்கையில இது வரைக்கும் பெருசா பணம், அந்தஸ்து பார்க்கலைங்க. இனிமேலாவது வசதியா வாழணும்னு நினைக்கறேன்" என்கிறார் மனோகர்.

- செந்தில்

# தமிழ் புத்தாண்டு பலன்கள்

(விய வருடம் – சித்திரை முதல் பங்குனி வரை)

தஞ்சை பரத்வாஜ்

**மேஷம்:** இந்த வருடத்தின் துவக்கமே உங்களுக்கு நல்ல சிறப்பான பலன்களைக் கொடுக்கும். எதிர்பாராத தன உயர்வுகளும், பொருளாதார முன்னேற்றமும் ஏற்படும். சில குருட்டு அதிர்ஷ்டங்களும் கிட்டும். தேர்வில் அதிக மதிப்பெண்கள் பெறுவீர்கள். உத்தியோகத்தில் நல்ல பதவி கிட்டும். திருமணம் நடக்கும். இந்த வருடத்தின் முன்பகுதியில் கிரஹ நிலைகள் அனுகூலமாக இருப்பதால் புதிய முயற்சிகள் நன்றாகக் கைகொடுக்கும். ஏற்றுமதி, இறக்குமதி, வாகன தொடர்பான தொழிலில் அதிக லாபம் ஏற்படும்.

**ரிஷபம்:** வருடத்தின் முதல் 5 மாதங்கள் சுமாராக இருக்கும். பணச் சுமைகள், வழக்கு வியாஜ்ஜியங்கள், குழந்தைகளால் ஏற்படும் மனக் குழப்பங்கள், உடல் ஆரோக்கிய தொல்லைகள், உத்தியோகத்தில் ஏற்படும் பிரச்னைகள், திருமணத் தடங்கல்கள் போன்றவற்றை எளிதில் சமாளிக்கலாம். சனியின் ஆதிக்கம் பலமாக உள்ளதால் தன்னம்பிக்கையும், புத்திசாலித்தனமும் கூடவே இருக்கும். ஆவணி மாதத்துக்குப் பிறகு உங்கள் காட்டில் வசந்த மழை பொழிய ஆரம்பிக்கும். அப்பொழுது குருவும் / சனியும் போட்டி போட்டுக் கொண்டு நற்பலனை அளிப்பர். எண்ணங்கள் யாவும் ஈடேறும். தொழிலில் வெற்றி இலக்கை அடையலாம்.

**மிதுனம்:** இந்த வருடத்தின் துவக்கம் ரொம்பவும் நற்பலனைத் தரும். திருமணக் காரியம் கைகூடும். உல்லாசப்



படம்: ஸ்ரீஹரி

பிரயாணம் ஏற்படும். பணம் பலவழிகளில் வந்து பாக்கெட்டை நிரப்பும். உடல்நிலை பாதிக்காது. புதிய வாகனம்/வீடு வாங்க நல்ல காலம். பணத்தை நல்ல வழியில் முதலீடு செய்வதற்கு நல்ல காலம். உயர்கல்வி நன்றாக அமையும். வியாபாரத்தில் அபரிமிதமான லாபம் கிட்டும். புதிய தொழில் துவங்க நல்ல காலம். உத்தியோகத்தில் பதவி உயர்வு, இடமாற்றம் உண்டாகும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். மகப்பேறு உண்டாகும்.

**கடகம்:** வருடத்தின் முதல் 5 மாதங்கள் சுமாராக இருக்கும். அதற்குப் பின் வீட்டில் சுபகாரியச் செலவுகள் நடக்கும். எண்ணங்கள் யாவும் ஈடேறும். சிலருக்கு வீடு வாங்கும் யோகம் கிட்டும். வெளியூர்ப் பிரயாணங்கள் செல்ல அழைப்புக் கிட்டும். திருமணத் தடை விலகி திருமணம் நடக்கும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். நண்பர், உறவினர்களால் ஆதாயம் ஏற்படும். புதிய தொழில் துவங்கலாம். வியாபாரத்தில் நல்ல லாபம் காணும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். உத்தியோகத்தில் பணி மாற்றம் ஏற்படும். நெருங்கியவர்கள் விலகிப் போக நேரிடும். வாக்கு வன்மை மேலோங்கும்.

**சிம்மம்:** இந்த வருடம் பல சோதனைகள் உண்டாகும். பல்வேறுவிதமான உபத்திரவங்கள் முதல் 5 மாதம் தலையெடுக்கும். சற்று பொறுமை, நிதானத்துடன் செயல்பட்டால் வெற்றி இலக்கை அடைய முடியும். படிக்கும் மாணவ - மாணவியர் படிப்பில் அதிக அக்கறையுடன் படிப்பது நல்ல பலனை அளிக்கும். குடும்ப வாழ்வில் கணவன்-மனைவி விட்டுக் கொடுத்து அனுசரணையுடன் நடந்துகொள்வது நற்பலனை அளிக்கும். வாக்குவாதம் தவிர்க்கவும். யாருக்கும் ஜாமீன் போடுவது/ கடன் கொடுப்பது ஏமாறுவதற்கு வாய்ப்பை ஏற்படுத்தும். பணவரவு உண்டாகும்.

**கன்னி:** இந்த ஆண்டு வெற்றிகரமான ஆண்டாக இருக்கும். புதிய தொழில் முயற்சி, வெளிநாட்டு வர்த்தகம், வீடு வாசல் வாங்கும் யோகம், வீட்டில் சுபகாரியச் செலவுகள், குழந்தைகளால் மனமகிழ்ச்சி போன்றவை ஏற்படும். பூமி மூலம் ஆதாயம் கிட்டும். கணவன்- மனைவிக்குள் சிறிய பூசல்கள் இருந்தாலும் வருடத்தின் மத்திம காலத்தில் நிவர்த்தி ஆகும். உத்தியோகத்தில் விரும்பிய இடத்துக்கு மாற்றல் ஏற்படும். உடல்நிலை பாதிக்காது. பொருளாதாரம் பலப்படும். வியாபாரத்தில் நல்ல அபிவிருத்தி ஏற்படும். தரித்திரம், பீடை விலகும். நிலுவையில் உள்ள வழக்குகள் முடிவுக்கு வரும்.

**துலாம்:** இந்த வருடம் சாதனை படைக்கும் ஆண்டாகும். எண்ணங்கள் யாவும் ஈடேறும். கொடுக்கல் வாங்கல் சீரும். பூமி மூலம் ஆதாயம் கிட்டும். உடல்நிலை பாதிக்காது. வழக்கு, வியாஜ்ஜியம் வெற்றி அளிக்கும். முதல் 5 மாதம் சுமாராக இருந்தாலும் பின்வரும் காலம் மன சந்தோஷத்தை அளிக்கும். மாணவ - மாணவியர் தேர்வில் அதிக மதிப்பெண்கள் வாங்குவார்கள். புதிய தொழில் முயற்சி பலன் அளிக்கும். பூர்வீகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். சத்ரு தொல்லை விலகும். திருமணத் தடை விலகி திருமணம் கைகூடும். நண்பர்/உறவினர் மூலம் ஆதாயம் கிட்டும். அசையாத சொத்துகள் சேரும். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும்.

**விருச்சிகம்:** ஆரம்பம் முதலே நற்பலன்கள் நிறைந்த ஆண்டாகும். திருமணக் காரியம் நடக்கும். மாணவ-








மாணவியர் தேர்வில் அதிக மதிப்பெண் பெற்று சாதனை படைப்பார்கள். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். வெளிநாட்டு வர்த்தகம் நற்பலனைத் தரும். உத்தியோகஸ்தர்களுக்கு வேலையில் நற்பெயர், ஊதிய உயர்வு, இடமாற்றம் ஏற்படும். நெருங்கிய உறவினர்/நண்பரை விட்டு விலகிச் செல்ல நேரிடும். தொழிலில் இருக்கும் மந்தநிலை மாறும். பொருளாதார முன்னேற்றம் கிட்டும். மகப்பேறு பெறும் பாக்கியம் உண்டாகும். கலைஞர்கள், எழுத்தாளர்கள் நல்ல பலனை அடைவார்கள்.

**தனுசு:** இது சுபமான ஆண்டாகும். சுப காரியம் கைகூடும். பிறந்த வீட்டை விட்டு புகுந்த வீடு செல்ல நேரிடும். எண்ணிய காரியங்கள் ஈடேறும். அனாமத்து சொத்துகள் கிடைக்கும். உடல்நிலையில் முன்னேற்றம் ஏற்படும். வீடு மாற்றம் உண்டாகும். புதிய வாகனம்/வீடு வாங்க நேரிடும். புதிய தொழில் மூலம் ஆதாயம் ஏற்படும். வெளிநாட்டு வர்த்தகம் நல்ல லாபத்தை ஈட்டும். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். மகப்பேறு கிட்டும். தொழில் துறையில் மாறுதல் செய்ய நேரிடும். உத்தியோகத்தில் உயர்வு, இடமாற்றம், கௌரவ பதவி, பண உயர்வு கிடைக்கும். சத்ரு தொல்லை விலகும். கலைஞர்கள் ஏற்றம் காண்பர்.

**மகரம்:** இந்த ஆண்டு வெற்றிநடை போடும் ஆண்டாகும். எண்ணங்கள் யாவும் ஈடேறும். தொலைதூரப் பிரயாணங்கள் செல்ல அழைப்பு கிட்டும். திருமணக் காரியம் கைகூடும். வீடு/வாகனம் வாங்க நேரும். புதிய தொழில் ஆரம்பிக்க உகந்த காலம். கௌரவ பதவி தேடி வரும். பணக் கஷ்டம் வராது. பொருளாதார அபிவிருத்தி ஏற்படும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். வருடத்தின் பின்பகுதியில் நெருங்கியவர்கள் இடம்மாறிச் செல்வார்கள். வேலைப் பளு அதிகரிக்கும். உத்தியோகத்தில் பதவி, இடமாற்றம் ஏற்படும். மாணவ-மாணவியர் தேர்வில் அதிக மதிப்பெண்கள் வாங்கி நற்பெயர் பெறுவார்கள். உடல்நிலை பாதிக்காது. கலைஞர்களுக்குப் பெயர், புகழ் ஏற்படும். வாக்குவன்மை மேலோங்கும்.

**கும்பம்:** இது மனத்தில் உற்சாகத்தையும், புத்துணர்ச்சியையும் தரும் ஆண்டாகும். பட்டம், பதவி, புகழ், தனம் போன்றவை தேடி வரும். எண்ணங்கள் யாவும் பலிதமாகும். மனசஞ்சலம் தீரும். நீண்ட நாள் முடிவு பெறாத விஷயங்கள் முடிவுக்கு வரும். சிலருக்கு வெளிநாடு செல்லக் கூடிய நிர்ப்பந்தம் ஏற்படும். பொருளாதாரச் சிக்கல் வராது. பணவரத்து ஏற்படும். சத்ரு தொல்லை விலகும். கொடுக்கல், வாங்கல், பயணம், யாருக்கும் ஜாமீன் போடுதல், வாக்குவாதம் செய்தல் போன்றவற்றில் முதல் ஐந்து மாதம் கவனமாக இருக்கவும். மகப்பேறு கிட்டும். பத்திரிகைகளில் பெயர் வரும்.

**மீனம்:** இந்த ஆண்டின் முதல் 5 மாதங்கள் சோதனைகள் வந்தாலும் பின்வரும் 7 மாதங்கள் நற்பலன் மிகுந்து காணும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். மனச்சலனம் போகும். வேலையில் ஊதிய உயர்வு, இடமாற்றம் ஏற்படும். பதவி உயர்வு கிட்டும். வீடு/வாகனம் மாற்றியமைக்க நேரிடும். பொருளாதாரச் சிக்கல் தீரும். கணவன்-மனைவி வாழ்வில் அனுசரித்துப் போவது நல்லது. மாணவ - மாணவியர் தேர்வில் அதிக மதிப்பெண்கள் பெற்று கல்வியில் விரும்பிய துறைகளில் சேர்வர். புதிய வேலைவாய்ப்புக் கிட்டும். மறைமுக எதிர்ப்புகள் இருக்கும். ஆதலால் யாரிடமும் வாக்குவாதம் செய்ய வேண்டாம். ○








எட்டாம் பாகம் 14

# முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்



ரஹுகண சக்கரவர்த்தி, ஜடபரதர் சொன்னதையெல்லாம் கேட்டு ஒன்றுமே புரியாமல் விதிர்விதிர்த்துப் போனார். பல்லக்கிலே இருந்து கீழே குதித்தார். "சுவாமி, தாங்கள் யாரோ தெரியவில்லை. தாங்கள் சொல்கிற விஷயம் எதுவுமே புரியமாட்டேனென்கிறது. கபிலரிடம் விஷயம் கேட்கலாம் என்றுதான் கிளம்பிப் பல்லக்கில் ஏறினேன். வழியிலே தாங்கள் வந்து இந்த மாதிரி பேசுகிறீர்கள். ஏதோ ஜன்மாந்திரத்திலே பண்ணிய பாப விசேஷத்தினாலே இந்தப் பல்லக்கு தூக்குதல் என்கிற ஒரு காரியம் உங்களுக்கு ஏற்பட்டுப் போச்சு. உண்மையில் இந்தப் பல்லக்கு தூக்குகிற நிலையே உங்களுக்கு இல்லை. நான் தப்பு பண்ணிவிட்டேன்; என்னை மன்னிக்க வேண்டும். எனக்குப் புரியும்படியாகச் சொல்ல வேண்டும்'' என்று அழகாக, பணிவாகக் கேட்டுக் கொண்டார்.

அப்போது ஜடபரதர் சொல்கிறார்:

''பல்லக்கைத் தூக்குவது நான் அல்ல. இந்த சரீரம் தூக்குகிறது. இந்த ஆத்மா

மற்றொரு ஆத்மாவுக்குத் தஞ்சன் அல்ல. எல்லா ஆத்மாக்களும் அந்த எம்பெருமானுக்கே தஞ்சம்...'' என்பதை அழகாக எடுத்துக்காட்டுகிறார்.

''ஒரு ஆத்மா இன்னொரு ஆத்மாவைத் தூக்க முடியுமோ? ஒரு சரீரம் மற்றொரு சரீரத்தைத் தூக்கலாமேயொழிய ஒரு ஆத்மா இன்னொரு ஆத்மாவைத் தூக்குதல் என்பது பொருந்தாத விஷயம். பல்லக்கைத் தூக்குவதால் உண்டான சிரமம் எனக்கு இல்லை. எனக்கு இல்லை என்றால், ஆத்மாவுக்கு இல்லை; சரீரத்துக்குத் தான் அந்தச் சிரமம். ஆகையினாலே, இப்போது நீ ஏதோ புண்ணிய விசேஷத்தினால் சக்கரவர்த்தியாக உட்கார்ந்திருக்கிறாய். பாப விசேஷத்தினால் இன்னொருவன் பல்லக்குத் தூக்குபவனாகப் பிறக்கிறான். தூக்குதல், தூக்கப்படுதல் என்கிற பாவமானது இங்கே இருக்கிறது. இது நல்ல முறையிலே உனக்குப் புரிய வேண்டும் என்பதற்காக ஒரு கதை சொல்லுகிறேன், கேள்...'' என்று ஆரம்பித்து, கதையைச் சொன்னார் ஜடபரதர்:

''பூர்வகாலத்திலே ருகு என்று ஒருத்தர் இருந்தார். அவருக்கு ஒரு சிஷ்யன் - நிதாகன் என்று பெயர். ஆத்மஞானம் கைவந்த மஹரிஷி ருகு.

''ஆத்மா என்பது மிகவும் சிறியது. அணுவானது. அதற்கு அவயவங்களெல்லாம் கிடையாது. ஆத்மாவிலே ஜாதி - மத பேதங்களெல்லாம் கிடையாது. பிராமணனான ஆத்மா, வைஸ்யனான ஆத்மா என்றெல்லாம் ஆத்மாவில் கிடையாது. சரீரத்துக்குத்தான் இந்த ஜாதி - பேதங்களெல்லாம்.

ஆத்மா என்றால், அது அறிவுடையதாக விளங்குகிறது, அந்த அறிவாகவும் விளங்குகிறது.''

- இப்படியெல்லாம் நிதாகருக்கு உபதேசம் பண்ணினார் ருகு. உபதேசம் பண்ணிவிட்டு ருகு என்பவர் புறப்பட்டுப் போய்விட்டார். நிதாகர் அதையே அப்படியே சிந்தனை பண்ணிக்கொண்டிருந்தார். இப்படி அவர் சிந்தித்துக்கொண்டிருக்கையிலேயே ஆயிரம் வருடங்கள் உருண்டோடின. ஒருநாள் நிதாகர் காட்டுக்குச் சென்று தர்பையெலாம் நிறைய எடுத்துக்கொண்டு, அதைத் தலையிலே மூட்டையாகக் கட்டிக்கொண்டு ஊருக்குள்ளே வருகிறார். தேவிகா என்கிற நதி தீரத்திலே, சுநகரம் என்கிற பட்டிணத்திலே வாஸம் பண்ணிக்கொண்டிருக்கிறார் நிதாகர். அன்றைய தினம் அந்த ஊர் ராஜாவுக்குப் பிறந்தநாள். வீதியிலே ஊர்வலமாக வந்துகொண்டிருந்தார். பட்டிணத்து யானை மேலே பவனி வருகிறார். ரத - கஜ - துரக பதாதிகளெல்லாம்கூட வருகிறார்கள்.

இவர், சமித்தை எடுத்துக்கொண்டு, தர்பத்தைக் கட்டிக்கொண்டு ஊருக்குள் வந்துகொண்டிருந்தாரே நிதாகர்... அவர் என்ன பண்ணினார் என்றால், இவற்றுக்கு நடுவிலே போனால், எல்லாம் அபவித்ரமாகிவிடுமே என்று சிந்தித்து, பிற்பாடு போகலாம் என்று முடிவு செய்து அவ்வளவு சுமையையும் தலையிலே வைத்துக்கொண்டு ஓர் ஓரமாக நின்று கொண்டிருக்கிறார்.

அப்போது அவருடைய ஆசார்யார் ருகு அங்கே வந்தார். ''வந்து இவரைப் பார்த்து, தனித்து இங்கே நின்றுகொண்டிருக்கிறீரே, வீட்டுக்குப் போகலாமே, ஏன் போகவில்லை?'' என்கிறார்.

''ராஜாவினுடைய ஊர்வலம் நடக்கிறதல்லவா? அது போன பிற்பாடு அக்கிரஹாரத்துக்குப் போகலாம் என்று இங்கேயே ஒதுங்கி நிற்கிறேன். பவித்திரமான வஸ்துவையெல்லாம் தலையிலே வைத்துக் கொண்டிருக்கிறேனே!'' என்றார்.

உடனே ருகு கேட்டார்: ''ஊர்வலமா? ராஜாவா? ராஜா என்றால் யார்?''

''ராஜாவென்றால் தெரியாதா? அதோ தெரிகிறதே பெரிய யானை,

# குறையொன்றுமில்லை

அந்த யானை மேல் உட்கார்ந்திருக்கிறானே, அவன்தான் ராஜா. கீழே இருக்கிறதே, அதுதான் யானை."

உடனே, "யானையா? யானையென்றால் யார்?" என்று கேட்டார் இவர்!

"யானையென்றால் தெரியாதா? நீண்ட துதிக்கையும் தந்தங்களும் கொண்டு அழகாக காட்சி அளிக்கிறதே, காதை ஆட்டுகிறதே... அழகான மணி போடப்பட்டிருக்கிறதே, பெரிய உருவத்தோடு இருக்கிறதே அதுதான் யானை... அதன்மேல் மண்டபம் இருக்கிறதே அதற்குள் இருப்பவன் ராஜா. மேலே இருப்பவன் ராஜா. கீழே இருப்பது யானை!"

உடனே ருகு கேட்டார்: "மேலே இருப்பவர் ராஜா, கீழே இருப்பது யானையா? மேலே என்றால் என்ன? கீழே என்றால் என்ன பொருள்...?"

"மேலே என்றால் தெரியாதா உனக்கு...?" என்று தலையிலிருந்த மூட்டையைக் கீழே போட்டார் நிதாகர். ருகுவின் மேலே ஏறி உட்கார்ந்து கொண்டார். வந்திருப்பவர் தன்னுடைய ஆசார்யர் என்பது தெரியாததினாலே, கருட வாகனம் மாதிரி இரண்டு பக்கமும் இரண்டு கால்களைப் போட்டுக்கொண்டு அவர் மேல் உட்கார்ந்து, அவர் தலையை ஒரு குத்து குத்திவிட்டுச் சொல்கிறார்:

"நீர் கீழே, நான் மேலே; நான் மேலே, நீர் கீழே... என் போன்று ராஜா அங்கே மேலே, யானை அங்கே கீழே. யானை கீழே, நீர் கீழே. ராஜா மேலே, நான் மேலே. யானை கீழே, நீர் கீழே!" என்று மாற்றி மாற்றி கனம் சொல்கிற மாதிரி பிரித்துப் பிரித்துப் பல தடவை சொன்னார்.

'நான் மேலே - நீ கீழே' என்பதை வலியுறுத்தி அதை ராஜாவுக்கும் யானைக்கும் ஒப்பிட்டு; 'தூக்குவது யானை, தூக்கப்படுவது ராஜா' என தூக்குதல் தூக்கப்படுதல் என்கிற சம்பந்தத்தை - வாஹ்ய - வாஹன பாவத்தை எடுத்துக்காட்டி, "அது போல்தான் நீர் என்னைத் தூக்குகிறீர்" என்று ஒரு போடு போட்டார்.

இவ்வளவையும் கேட்டுக்கொண்ட ருகு, "நான் மேலே நீர் கீழே என்று சொல்கிறாயே... நான் என்றால் யார்? நீர் என்றால் யார்?..." என்று கேட்டார்!

அப்போதுதான் வந்திருப்பவர் யார் என்பது அந்த நிதாகருக்குப் புரிந்தது!

இந்த மாதிரி விசாரம் பண்ணுபவர் நம் ஆசார்யர் ஒருவர்தான். ஆத்ம விசாரம் பண்ணுகிறவர் அவர். லோகத்தில் மற்ற எல்லோரும் சரீரத்தைப் பார்த்துவிட்டுப் போகிறார்களேயொழிய ஆத்ம விசாரம் பண்ணக் கூடியவர்கள் யார் இருக்கிறார்கள்?! அத்தகைய மகான் இவர் ஒருவர்தான் என்பதைத் தெரிந்துகொண்டார்.

கீழே குதித்தார். "என்னை மன்னித்தருள வேண்டும்.... தாங்கள் என்று தெரியவில்லை. தாங்கள் எனக்கு ஞானத்தை உணர்த்த வேண்டும்" என்று கேட்டுக்கொண்டார்.

அப்போது ருகு சொன்னார்: "ஆயிரம் வருஷங்கள் ஆயிற்று நான் உனக்கு



"சூறாவளி சுற்றுப்பயணம் நடத்துற தலைவர் சுமாரா எத்தனை கூட்டத்துல பேசுவாரு?"

"எல்லாக் கூட்டத்துலயும் சுமாராத்தான் பேசுவாரு...!"

- தஞ்சை தாமு

# வாரியார் அமுதம்...



உன்னை யாராவது புகழும்போது மகிழ்ச்சியடையாதே; அதேபோல் உன்னை இகழும்போது கவலையுமடையாதே. இகழையும் புகழையும் சமமாகக் கருது. அதனால் உன் மனது அமைதியாக இருக்கும். நாட்டையும் காட்டையும் இன்பத்தையும் துன்பத்தையும் வருவதையும் போவதையும் பகையையும் உறவையும் ஒன்றாகக் காண்க. அலையற்ற கடல்போல் நிலையுற்றிரு.

உபதேசம் செய்து. இவ்வளவு நாள் நீ மனனம் பண்ணினாலும் உனக்கு ஞானம் கை வரவில்லை. எல்லாம் தெரிந்த மாதிரி பேசுவோம்; புரிந்த மாதிரி இருக்கும். ஆனால் ஒன்றும் புரியாது. மறுபடியும் மறுபடியும் அதே விஷயத்திலேயே நாம் உழன்று கொண்டிருப்போம். ஆத்மஞானம் கை வருவதென்பது ரொம்ப கஷ்டம்.

ராஜ சரீரத்தை யானை சரீரமானது தூக்குகிறதேயொழிய, ராஜாவுக்குள்ளே இருக்கிற ஆத்மாவுக்கும் யானைக்குள்ளே இருக்கிற ஆத்மாவுக்கும் தூக்குதல் தூக்கப்படுதல் என்கிற சம்பந்தம் இல்லை. இதை நீ உணர வேண்டும் என்பதற்காகத்தான் உனக்கு இன்று வந்து தெரியப்படுத்தினேன்.

ஏதோ ஒரு பாப விசேஷத்தினால் நான் அது பிராணியாக வந்து தூக்குகிறது; புண்ய விசேஷத்தினாலே இன்னொரு ஆத்மாவுக்கு ராஜ சரீரம் கிடைத்திருக்கிறது. சக்கரவர்த்தியாக அவன் உட்கார்ந்திருக்கிறான்.''

இதை உபதேசித்துவிட்டு, ''நான் போய் வருகிறேன்'' என்றார் ருகு. ''சரி நடப்படுங்கள்'' என்றார் நிதாகர்.

**ப**ல நாட்கள் சென்றன. இப்படியே பல நாள் நிதாகர் நித்யம் வைச்வதேவாந்தம் பண்ணிவிட்டு வெளியிலே காத்துக்கொண்டிருப்பார்.

வைச்வதேவம் என்கிற கர்மாவை கிருஹஸ்தாசிரமத்திலே நித்யம் பண்ண வேண்டும்.

காய்கறிகளை நறுக்குகிறோம் - அரிவாள்மணையில் நம் கிருஹத்திலே கல்யாணம் என்றால் வாழை மரத்தை வெட்டிக் கொண்டுவந்து கட்டுகிறோம். மாவிலைகளையும் தோரணமாக ஆக்குகிறோம். காய்கறிகளையே உண்டாலும், அவற்றை வெட்டுதல், நறுக்குதல், இருத்துதல்கூட பாவம்தான். தாவர வர்க்கங்களை அழிக்காமல் இருக்க முடியவில்லை. நாம் சாப்பிடுவதற்காக இப்படியெல்லாம் பண்ணுகிறோம். கத்தியால் அறுத்தல் என்பது பெரிய - தப்பான காரியமானதனாலே அந்தப் பாவமெல்லாம் நீங்க வேண்டும். நாம் படுத்துக்கொண்டிருக்கிற போது எத்தனையோ கிருமி கீடாதிகளெல்லாம் மாண்டு போகின்றன. அந்தப் பாபமெல்லாம் போவதற்காக வைச்வதேவம் என்ற கர்மாவை கிருஹஸ்தாசிரமிகள் நித்யம் செய்ய வேண்டும்.

இந்த கர்மாவைத்தான் நிதாகர் செய்து வந்தார். (வளரும்)

# வெந்த கனவுகள்...

**சூர்யன்**

ஓட்டு வீடு வேண்டாம்
வேற வீடு பாருங்க
மனைவியின் அங்கலாய்ப்புக்கு
இந்த வருடமும் தலையாட்டுகிறேன்

முதன்முறையாய்
நகரம் வந்த தாத்தா
ஊரே செங்கச் சூளையாய்
வேகிறதெனப் புலம்புகிறார்

தொலைக்காட்சியில் வரும்
குளிர்பானங்களையெல்லாம்
பாவனையாய்
குடித்து மகிழ்கிறான் பையன்

இந்தக் கோடை
ரமணிக்குப் பரிசாய்
சின்னம்மையைக்
கொண்டு வந்திருக்கிறது

மின் விசிறிகளின்
தாராளத்தில்
வியர்வையைப் போலவே
உலர்ந்து விடுகின்றன
கனவுகளும்



அந்தப் பக்கம் கரும்புக் கட்டுகளைச் சுமந்து, டிராக்டர் லாரிகள் ஊர்ந்து செல்ல, இந்தப் பக்கம் கணீரென்ற குரலில் நம் காதில் வந்து மோதுகிறது பாடல்...

'காட்டூருக்கும் மேற்கே
கரும்பு வெளையும்
தெற்கே
சர்க்கரை மில்லாம்
பார்க்க
சப்தமில்லாம வாங்க!'

குரல் வந்த திசையிலேயே நடந்தோம். வாய்க்கால் வரப்பு, கரும்புக் கொல்லைகளைத் தாண்டி நம்மை இழுத்துச் சென்றது பாடல்.

# "கஷ்டப்பட்டா ராணி... வாங்கிப்போட்டா காணி!"

'அத்தை மகளே அழகி
அஞ்சாறு மாசமா பழகி
ஆளுக்கொரு வேலை செஞ்சா
அதிக சம்பளம் வாங்கி!

என்று பாடியபடி அறுவடை முடிந்த வயலை விதைப்பதற்காகக் கொத்திக் கொண்டிருந்தார் ஒரு நடுத்தர வயதுப் பெண்மணி. நெருங்கிப் பேச்சுக் கொடுத்த போதுதான் தெரிந்தது அவர் நெஞ்சில் மோதிய உணர்வுகள்...

"சீரும் செறப்புமா வாழுனோமின்னு எனக்கு ராணின்னு பேரு வச்சாங்க. அப்பன் ஆத்தா, லால்குடி கொத்த மங்கலம்தான் சொந்த ஊரு. அஞ்சாப்பு வரைக்கும் படிச்சேன். என் மாமே ராசாவ வீட்ல கல்யாணம் முடிச்சு வச்சாங்க. நாங்க ரெண்டு பேருமே வெவசாயக் கூலிங்கதேன். கஷ்டப்பட்டு வேலை செய்வோம். சஞ்சாயக் கூலிக்கும் (காலை எட்டு மணியிலிருந்து ஒரு மணி வரைக்கும்), அந்திக் கூலிக்கும் (மாலை மூன்று மணியிலிருந்து ஆறு மணி வரைக்கும்) போவோம். உழைப்புக்குப் பலன் இல்லாமப் போகுமா? ஒரு வருஷத்துல ரெண்டு கறவை மாடுங்க வாங்கினோம். தீவனச் செலவு போக மாசம் ஆயிரத்து ஐநூறு ரூபா மிச்சமாச்சு. அப்படியே அத போஸ்ட் ஆபீஸ்ல சேமிப்புல போட்டோம்.

ரெண்டு வருஷங் கழிச்ச என் மகன் ராம்கி பொறந்தான். அதுக்கப்புறம் பவித்ரா. குழந்தைங்க, வருமானம்னு குறையில்லாம போயிட்டிருந்த வாழ்க்கையில திடீர்னு தடுமாற்றம். என் புருஷன் இறந்துட்டாரு. நாமளும் ஏண்டா இருக்கணும்னு ஆயிப்போச்சு. ஆனா என் புள்ளைங்கள நினைச்சுப் பார்த்து அந்த எண்ணத்தை அடியோடு எடுத்துப்போட்டு அதுங்களுக்காகவே வாழ ஆரம்பிச்சேன். பையனை திருப்பராய்த்துறை ராமகிருஷ்ண தபோவனத்துல

சேர்த்துவிட்டிருக்கேன். இப்போ பத்தாப்பு படிக்கிறான். படிப்புச் செலவு, சாப்பாடு, தங்க இடம், டிரஸ்னு எல்லாமே அங்கன இலவசம். எந்த லீவுக்கும் அவன அனுப்ப மாட்டாங்க. பெத்தவங்கதான் விருப்பப்பட்டா அங்க போய் பாக்கலாம்.

அவனைப் பிரிஞ்சு இருக்கறது மனசுக்கு கஷ்டமாத்தான் இருக்குது. ஆனா, தபோவனத்துல தங்கிப் படிச்சான்னா நல்ல கல்வி, அப்புறமா அவுங்களே ஐ.டி.ஐ இல்லாட்டி டிப்ளோமான்னு எல்லாமே அவுங்க செலவுலயே படிக்க வைச்சுடுவாங்க. அவன் நல்லா படிச்சு பின்னாடி ஒரு உத்தியோகம் வேலைன்னு அடைஞ்சுடுவான்னுதான் மனச கல்லாக்கிட்டு இருக்கேன்" என்று வழிந்த கண்ணீரைத் துடைத்துக்கொண்டு பேசும்



• மகளுடன்...

ராணியுடன் தற்போது இருப்பது அவரது மகள் பவித்ரா மட்டுமே. எட்டாம் வகுப்பு படித்து வருகிறாள். இரண்டு ஆண்டுகளுக்கு முன்பாக கொத்தமங்கலத்தில் முக்கால் ஏக்கர் வயல் (ஒரு லட்ச ரூபாய்) வாங்கியிருக்கிறார் ராணி. கரும்பு பயிரிடப்பட்டு, அறுவடையாகி கோத்தாரி சர்க்கரை ஆலைக்கு அனுப்பப்பட்டிருக்கிறது.

"என் வூட்டுக்காரர் போலவே நானும் கால நேரம் பார்க்காம கஷ்டப்பட்டேன். அந்தக் கஷ்டங்களுக்குப் பலன் கெடைச்சது. சொந்தமா வயல் வாங்கிட்டேன். 'கஷ்டப்பட்டா ராணி... வாங்கிப்போட்டா காணி'ன்னு எங்க காலனியில எல்லாரும் பேசிக்கிறாங்க! பெருமையா இருக்குங்க" என்கிறார் ராணி.

**- திருவரசு**

---

# இத்தாலியிலிருந்து இன்னொரு சோனியா!

'**சோ**னியா' என்ற பெயரில் சோனியாகாந்தியைப் பற்றிய திரைப்படம் ஒன்று தயாராகிறது. படத்தின் டைரக்டர் ஜக்மோகன் முந்த்ரா. படத்தின் திரைக்கதை சோனியா பற்றி வெளிவந்துள்ள ஒரு புத்தகத்தை அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்பட்டுள்ளது. 1964 முதல் 2004 வரையிலான சோனியாகாந்தியின் வாழ்க்கைதான் படத்தில் இடம்பெறப் போகிறது. இங்கிலாந்து கேம்பிரிட்ஜில் சோனியா படிக்கச் செல்வதிலிருந்து கதை ஆரம்பிக்கிறது. அங்கே ராஜீவ்காந்தியுடன் காதல், அதற்கு எழுந்த எதிர்ப்பு, 1968-ல் சோனியா இந்தியாவுக்கு வருதல் என சம்பவங்கள் ஒன்றுவிடாமல் கதை



தொடர்கிறது.

ஐஸ்வர்யாராயைத்தான் முதலில் சோனியா கதாபாத்திரத்தில் நடிக்க வைக்க முயற்சித்தார்கள். ஆனால் அவர் ரொம்ப பிஸி. இறுதியாக அந்தக் கதாபாத்திரத்துக்கு பேசப்பட்டிருக்கும் நடிகை மோனிகா பெலூசி. இத்தாலி நாட்டைச் சேர்ந்த சூப்பர் ஸ்டாரினி. 'மேட்ரிக்ஸ் ரீ லோடட்', 'தி ஃபேஷன் ஆஃப் தி கிறிஸ்ட்' - இவை எல் லாம் மோனிகாவின் லேட் டஸ்ட் ஹிட்ஸ்! இப்போது கனடாவிலிருக்கும் மோனிகாவுடன் சம்பளம், கால்ஷீட் சம்பந்தமாகப் பேச்சுவார்த்தை நடந்து வருகிறது. மோனிகா க்ரீன் சிக்னல் காட்டிவிட்டால் இத்தாலியிலிருந்து இன்னொரு சோனியா வர ரெடி!

**- முகில்**

# ஜெயிலுக்குப் போன சுஜாதா!

புத்தக வெளியீட்டு விழாக்கள் நிறைய மாற வேண்டியிருக்கின்றன. மேடையில் ஒரு சிறிய ஊரே ஏறிக்கொள்வது, அறிமுக உரைக்கோர் அறிமுக உரை, வாழ்த்துரைக்க வந்தவருக்கு ஒரு வாழ்த்துரை என்று தொடங்கி ஒவ்வொரு தலையும் ஒரு முழு மணி நேரத்தை விழுங்கி ஏப்பம் விடுவது சம்பிரதாயமாகப் போய்விட்டது. இத்தகைய செயல்கள் மனித உரிமை மீறல்கள் பட்டியலில் சேர்க்கப்பட வேண்டியவை.

சென்ற வாரம் லேண்ட்மார்க்கில் மனித உரிமை மீறல்கள் இல்லாமல் ஒரு புத்தகத்தை வெளியிட்டது ராஜராஜன் பதிப்பகம். தலைப்பு - வாய்மையின் வெற்றி : ராஜீவ்காந்தி படுகொலை புலனாய்வு. முன்னாள் சி.பி.ஐ. இயக்குநர் டி.ஆர். கார்த்திகேயன் (ராதா விநோத் ராஜு என்பவருடன் இணைந்து) ஆங்கிலத்தில் எழுதிய இப்புத்தகத்தை, எஸ்.சந்திரமௌலி தமிழ்ப்படுத்தியிருக்கிறார். பொதுவாக வெள்ளைக்கார புத்தகங்களுக்கு மட்டுமே கிடைக்கும் ஒரு பாக்கியம் இந்தப் புத்தகத்திற்கும் கிடைத்திருக்கிறது. அதாவது புத்தக வாசிப்பு. நடிகர் சிவகுமார் புத்தகத்திலிருந்து சில பகுதிகளை கணீர்க் குரலில் தெளிவாக வாசித்துக் காட்டி கைதட்டலை அள்ளிச் சென்றார்.

தலைமை தாங்கிய நீதியரசர் கற்பக விநாயகம், ஆசிரியரையும் புத்தகத்தையும் பாராட்டி விட்டு சிலபஸ் தாவிவிட்டார்.

புத்தகத்தை அறிமுகம் செய்துவைத்த சுஜாதா, 'தமிழ் மொழிபெயர்ப்பு சுத்தமாக இருக்கிறது' என்றார். "நான் பெங்களூர் சென்றிருந்தபோது கார்த்திகேயனின் அலுவலகத்தில் அவருக்காகக் காத்துக் கொண்டிருந்தேன். நிறைய வித்தியாசமான வழக்குகள் அவரிடம் வந்து கொண்டிருந்தன. சில நாட்கள் அப்ரெண்டிஸாக உங்களுடன் தங்க அனுமதி தருவீர்களா என்று கேட்டேன். ஒப்புக்கொண்டார். இதைவிட ஒரு எழுத்தாளனுக்கு என்ன வேண்டும்?' என்றார்.

இந்த அனுபவங்களிலிருந்து பின்னர் சில நாவல்களை எழுதியதாகச் சொன்னார். ''அசாஸினேஷன்' எனும் வார்த்தைக்கு படுகொலை எனும் சொல்தான் நம்மிடம் தற்போது இருக்கிறது. மாற்றுச் சொல் கண்டுபிடிக்க வேண்டும்" என்றார். மற்றொன்றும் சொன்னார். "ஜெயிலுக்குப் போக வேண்டும் எனும் விருப்பத்தை கார்த்திகேயனிடம் சொன்னேன். அவரும் ஒப்புக்கொண்டார். திருப்தியுடன் ஒரு நாள் ஜெயிலில் கழித்தேன்."

- மருதன்

* நூல் வெளியீட்டு விழாவில்...



வற்றாத நீரூற்றைக் கொண்டது அந்தக் கிணறு. பக்கத்தில் தோட்டம். சுற்றிலும் பத்துப் பன்னிரண்டு தென்னைகள். காய்கள் அப்பிக் குலை குலையாகத் தொங்கின.

தோட்டச் சொந்தக்காரர் விநாயகம்பிள்ளை ஈவு இரக்கம் கெட்ட மனுஷன். குளிப்பதற்கு கிணத்துப் பக்கம் யாரையும் அண்டவிட மாட்டார். எந்தப் பொருளும் அங்கு களவு போகாது. போட்டது போட்ட இடத்தில் கிடக்கும். செல்லப்ப வாத்தியாரை மட்டும் அவர் கண்டுகொள்வதில்லை.

செல்லப்ப வாத்தியார் வேதியியல் பாடத்தில் முதுகலைப் பட்டம் பெற்றவர். அவ்வூர் அரசினர் மேல்நிலைப் பள்ளியில் முதன்முதலில் வேலைக்குச் சேர்ந்து பன்னிரண்டு ஆண்டுக்கு மேல் அங்கேயே காலத்தைத் தள்ளிவிட்டார்.

நன்னூலில் சொன்ன நல்லாசிரியருக்கு உரிய இலக்கணம் இந்தக் காலத்திலும் இவராகத்தான் இருக்க முடியும். மாணவர்களைக் கண்டிக்க வேண்டிய நேரத்தில் பயப்படாமல் கண்டித்தும், கருணை காட்ட வேண்டிய நேரத்தில் ஒரு தாய் போலும் நடந்துகொள்வார்.

டியூசன் கடை திறந்து முதலீடு போடாமல் சம்பாதிக்கும் ஆசிரியர்களுக்கு இடையில் அரசாங்கம் கொடுக்கும் சம்பளமே போதுமென நினைப்பவர். இது அவர் மனைவிக்குப் பிடிப்பதில்லை. "உலகத்தோடு ஒத்துப்போகத் தெரியாத மனுஷன். சொல்லிக் கொடுக்கறதில நல்ல வாத்தியாருன்னு பேரு வாங்கிட்டா சொத்துச் சுகம் ஏறிடுமாக்கும். பிழைக்கத் தெரியாத ஆளு" என்று பலமுறை குத்திக் காட்டியும் இவர் கவலைப்படுவதில்லை. தன் போக்கிலிருந்து விலகுவதும் இல்லை.

சூரியன் உதயமாவதற்கு முன்பே குளிப்பதற்காக வந்து விடுவார் வாத்தியார். மழைக்காலமோ பனிக்காலமோ அந்த நேரத்தைத் தவற விடுவதில்லை. தர்மருக்குச் சூதாட்டத்தில் ஈடுபட புத்தி எவ்வாறு சலனப்பட்டதோ, அதே போல் இவருக்கும் என்றுமில்லாத ஆசை அன்று விபரீதமாகத் தோன்றியது.

கிணற்றுக்குள் வேகமாக இறங்கினார். வேட்டி துண்டையெல்லாம் களைந்து அலசி வைத்தபின் குறைந்தது கால்மணி நேரமாவது நீந்திக் குளிக்கக் கூடியவர், ஐந்தே நிமிடத்தில் முடித்துக்கொண்டு மேலே வந்தார். அருகில் கிடந்த சரள் குவியலில் ஏறினார். நாலா திசையும் நோட்டமிட்டார். ஆள் நடமாட்டம் ஒன்றும் தெரியவில்லை. உதிர்ந்து கிடந்த தேங்காய் ஒன்றை எடுத்துக்கொண்டு புறப்பட்டார்.

தோட்டத்தைக் கடந்துவிட்டால் பயமில்லை. பிறகு யாரும் சந்தேகப் படமாட்டார்கள். வேகத்



# குத்தமுள்ள நெஞ்சு...

வீரசிகாமணி ஆதினமிளகி

தைக் கூட்டினார்.

சட்டென்று அவருக்குள் மின்னல். மனிதன் செய்யக்கூடிய தீய செயல்களில் எல்லாம் முற்றிலும் தீயதும், சற்றும் மன்னிக்க முடியாததும் களவு ஒன்றே என்று நாமே மாணவர்களுக்குப் போதித்துவிட்டு இதைச் செய்தது எவ்வளவு பெரிய துரோகம். 'இந்தச் சனியன் வேண்டாம்' என்று எறிந்துவிட எத்தனித்த நேரத்தில் "என்ன சார், தேங்காயோட வாரீக" என்ற குரலைக் கேட்டு ஆடிப்போனார். சத்தம் வந்த திசையைப் பார்த்தார். மிளகாய்ச் செடிக்கு இடையே புல்லறுத்துக் கொண்டிருந்த சீனியம்மாள் சிரித்தாள். போன உயிர் திரும்பி வந்ததைப்போல் உணர்ந்தார். இவளிடம் கொடுத்துவிட வேண்டியதுதான். "இந்தா, இதை நீ வேணுமின்னா கொண்டு போயேன்"

"வேண்டாம் சாமி! இந்தத் தோட்டக்கார விநாயகம்பிள்ளை கொடுத்தானா? நம்ப முடியலயே. அவன் பாவில்ல. எச்சக் கையில காக்கா விரட்ட மாட்டான். இதை நான் வச்சிருக்கிறத பாத்தான்... வேற வினையே வேண்டாம். ஊருல சொல்லி களவாணிப் பட்டம் கட்டி கேவலப்படுத்தித் தண்டமும் வாங்கிடுவான்" என்றாள்.

'இந்தப் பொம்பளைக்கு இருக்கிற பட்டறிவுகூட நமக்கு இல்லையே' என்ற எண்ணம் மனத்தைக் குடைய தோட்டத்தைக் கடந்து வெளியே வந்துவிட்டார் செல்லப்ப வாத்தியார்.

இனி ஊர்வரை எதிரில் பலர் வரக்கூடும். பதில் சொல்லி முடியாது. பொய்தான் சொல்ல வேண்டி வரும். அதைத் தவிர்க்கச் சுற்றிச் செல்லும் ஒரு பாதையில் நடந்தார்.

தேங்காயைக் கக்கத்தில் வைத்து உடம்பைச் சுற்றித் துண்டால் மூடிப் பார்த்தார். அக்குளில் சிலந்தி வந்தவன் கையைத் தூக்கிக்கொண்டு அலைவானே அதுபோல் இருந்தது. 'சே... இது எங்க அப்பன் குதிருக்குள்ள இல்லை என்பதுபோல காட்டிக்கொடுத்து விடும். கையிலேயே இருக்கட்டும். இதால அவமானமாப் போச்சு.' சனியன் பிடித்த நளச்சக்கரவர்த்திக்குச் சோதனைக்கு மேல் சோதனை வந்ததைப் போல அவர் சென்ற பாதையின் எதிரே சற்று தூரத்தில் நான்கு மாணவர்கள் புத்தகமும் கையுமாக வந்துகொண்டிருந்தார்கள். பன்னிரண்டாம் வகுப்பு கணிதப் பிரிவில் இவரிடம் பாடம் படிப்பவர்கள். அதில் ஒருவன், அந்தத் தேங்காய்க்குச் சொந்தக்காரன். அவர்களைப் பார்த்தவுடன் வாத்தியாருக்குக் குப்பென்று வேர்த்தது. ஆனால் நடந்ததோ வேறு.

"ஏலே நம்ம செல்லப்ப சார் வாராகடா. காலையில படிக்காம சுத்துறீங்கன்னு திட்டினாலும் திட்டுவாங்க" என்று ஒருவன் சொல்ல, எல்லோரும் ஓட்டமும் நடையுமாக வேறு பாதையில் வெகுதூரம் சென்றனர்.

வெட்ட வெளியாக இருந்ததால் தேங்காயை எறியவும் முடியவில்லை. பிரம்மாவின் தலையைக் கொய்து எறிய நினைத்த சிவனின் கையிலேயே அது ஒட்டிக்கொண்டு, விடாமல் பிரம்மகத்தி தோஷம் பிடித்து அலைக்கழித்தது போல் செல்லப்ப வாத்தியாரையும் இந்தத் தேங்காய் ஒட்டிக்கொண்டு வேதனைப்படுத்த, ஒருவாறு அவர் வீடிருக்கும் தெருமுனைக்கு வந்து சேர்ந்தார்.

கொஞ்சம் தைரியம் வந்தது. அக்கம் பக்கம் பார்க்காது தலையைத் தொங்கப் போட்டுக்கொண்டே வீடு வந்து சேர்ந்த பின்புதான் பெருமூச்சு விட்டார்.

வீட்டுக்குள் நுழையும் நேரம். பின்னாலிருந்து "என்ன சார் இப்பத்தான் குளிச்

சிட்டு வாரீங்களா" என்கிற குரல்.

'என்னடா இது. மழை விட்டும் தூவானம் விடவில்லையே' திரும்பிப் பார்த்தார். உடலில் ரத்தம் உறைந்தே போய்விட்டது. விநாயகம்பிள்ளை நின்றிருந்தார்.

'தேங்காயை எடுத்துக்கொண்டு வந்தது அதற்குள் எப்படித் தெரிந்தது. பால்கார சீனியம்மாள் சொன்னது சரிதான். எமகாதகனா இருக்கானே. ஒரு வாத்தியாருன்னு தெரிஞ்சும் வீடு தேடிக் கேட்டு வந்துட்டானே' - குற்றமுள்ள நெஞ்சு குறுகுறுத்தது. தவறு செய்த ஆசிரியர், விசாரணைக்காகப் பள்ளிக்கு வந்த முதன்மைக் கல்வி அதிகாரியின் முன் நிற்பதைப் போல பிரமித்து நின்றார்.



"ஐயா, என் மகன் கண்ணன் உங்ககிட்டதான் பன்னிரண்டாம் வகுப்பு படிக்கான் தெரியுமில்லய்யா" என்றார் விநாயகம்பிள்ளை.

புயல் திசை மாற... - "ஆமா கண்ணனை நல்லாத் தெரியும். சுமாராப் படிப்பான்" சுரத்து இல்லாமல் ஏதோ சொன்னார்.

"அவனை எப்படியும் நல்ல மார்க்கு வாங்க வைக்கணும். நீங்க நினைச்சா நடக்குமிங்கிறாங்க."

செல்லப்ப வாத்தியாருக்குத் தேங்காய் எண்ணமே இருந்ததால் அவர் சொன்னதை அரைகுறையாகவே கேட்டார். இவரைச் சீக்கிரம் கிளப்பிவிட வேண்டும் என்று மேலும் பேச விடாமல்

"நீங்க கவலைப்படவே வேண்டாம். முழுப் பரீட்சை வர இன்னும் ஆறு மாசம் இருக்கு. லீவு நாள்ல எங்கிட்ட அனுப்புங்க. நான் பார்த்துக்கிடுறேன்."

"சரி ஐயா" அன்று அவரும் போய் விட்டார்.

தேங்காயைப் பார்த்த வாத்தியார் மனைவி "இன்னக்கித்தான் ஒரு உருப்படியான காரியத்தைப் பண்ணியிருக்கீங்க. இப்படித்தான் பிழைக்கணும். சட்னிக்குத் தேங்காய் இல்லன்னு இருந்தேன்" என்று மகிழ்ச்சியோடு வாங்கிச் சென்றாள்.

'இந்தத் தேங்காயில் ஒரு சிறு துண்டு கூட அனுபவிக்கக்கூடாது. பாவப்பட்ட பொருள். அதற்குப் பிராயச்சித்தம் தேடியே ஆக வேண்டும்' என்று நினைத்தபடி வாத்தியார் பூஜை அறைக்குள் நுழைந்தார்.

அரிவாளை எடுத்துத் தேங்காய் நெற்றை உறித்தாள் அவரது மனைவி. ஒரு கொத்துப்பட்டுச் சதப்பென்று முகத்திலும் சேலையிலும் தெளித்து நாறியது. "சே, இந்த மனுஷனுக்குக் கூறே கிடையாது. வெவரம் கெட்டவர்னு தெரிஞ்சுக்கிட்டு எவனோ அழுகலைத் தலையில கட்டி விட்டுட்டான். இவராவது பிழைக்கத் தெரியறதாவது. துப்புக்கெட்ட மனுஷன்" என்று புலம்பிக்கொண்டே வாளியில் துணிகளை எடுத்து வைத்துக்கொண்டு "இந்த நாத்தத்தோட மனுஷி இருக்க முடியுமா... நா போயி குளிச்சிட்டு வாரேன்" என்று சத்தம் போட்டுச் சொல்லிப் புறப்பட்டாள்.

பூஜை அறைக்குள் இருந்த செல்லப்ப வாத்தியாருக்கு இது கேட்டது. 'கண்ணா! இப்பத்தான் நிம்மதி. என்னை மன்னித்திட்டப்பா' என்றார்.

"அமைச்சரே, அன்னம் மூலம் அண்டைநாட்டு மன்னனிடமிருந்து தூது வந்திருக்கிறதே, என்ன விசேஷம்?"

"மன்னா, இந்தத் தூது தங்களுக்கு இல்லை, பட்டத்தரசிக்கு." - ஜோ

# "இது ஒன்றும் எள்ளுருண்டை அல்ல...!"

செல்வச் சீமாட்டியாக வாழ்ந்திருக்கலாம் காஞ்சனா. ஆனால் ஸ்ரீரங்கத்துப் பிரமுகர் குடும்பத்தில் பிறந்து சீராட்டி வளர்க்கப்பட்டவர் எள்ளுருண்டையாகக் கருதப்படும் ஒரு பணியைத் தேர்வு செய்தார் - உடற்பயிற்சி ஆசிரியர் பணி!

'எந்தப் பள்ளியிலும் உடற்பயிற்சி வகுப்புகள் சீரியஸாக எடுத்துக் கொள்ளப்படுவதில்லையே, எக்ஸ்ட்ரா போர்ஷன்ஸ் நடத்தி முடிக்கவும் ரிவிஷன் டெஸ்ட் வைக்கவும் உடற்பயிற்சி வகுப்புகளின் தலையில் பள்ளி நிர்வாகம் கைவைத்துவிடுகிறதே?' என்று காஞ்சனாவிடம் வாதிட்டுப் பாருங்கள்... சும்மா சீறிப் பாய்வார்...

"உடற்பயிற்சியின் முக்கியத்துவம் தெரிந்த யாரும் அப்படிச் செய்யமாட்டார்கள். எனது அனுபவம் வேறு. 1973 முதல் இந்தப் பணியில் இருக்கிறேன். அன்று முன்னூற்றைம்பது ரூபாய் சம்பளம் வாங்கியபோதும் சரி, இன்று திருச்சி பாய்லர் பிளான்ட் பெண்கள் மேல்நிலைப்பள்ளியில் சீனியர் நிலையில் உள்ளபோதும் சரி... என் வகுப்புகளை உயிரைக் கொடுத்துதான் நடத்துகிறேன்... நிர்வாகமும் நன்கு ஒத்துழைக்கிறது" என்கிறார்.

சென்னை ஒய்.எம்.சி.ஏ.வில் உடற்கல்வி ஆசிரியர் பயிற்சி பெற்றவர் காஞ்சனா. உடனே வேலை கிடைத்துவிட்டது திருச்சி வரகனேரி டிஎஸ்எம். உயர்நிலைப்பள்ளியில். அப்போது அவர் வயது வெறும் 18. பின்னர் பாய்லர் பிளான்ட் மேல்நிலைப் பள்ளியில் சேர்ந்து விளையாட்டில் சிறந்த மாணவிகளை அடையாளம் கண்டு, நாடு வியக்கும் வகையில் அவர்களை உருவாக்கியிருக்கிறார் காஞ்சனா. ஷட்டில் காக்கில் ஹரிணி விஜயலக்ஷ்மி, கூடைப்பந்தில் ரேவதி இருவரும் இவரால் முறையே மாநில, தேசிய அளவில் விளையாட உருவானவர்கள்.

"இன்று ரேவதி சிங்கப்பூரில் ஒரு மேல்நிலைப் பள்ளியில் உடற்கல்வி ஆசிரியர். 2004 ஆண்டு 'பெஸ்ட் டீச்சர்' விருதை சிங்கப்பூர் ஜனாதிபதியிடம் பெற்றிருக்கிறாள்... எனக்கு எவ்வளவு பெருமிதமாக இருக்கும் என்று சிந்தித்துப் பாருங்கள். இது ஒன்றும் எள்ளுருண்டை பணியல்ல... ஏழு கடல் தாண்டியும் இதற்கு மதிப்பு உண்டு" என்று படபடக்கும் காஞ்சனா, பாய்லர் பிளான்ட் பள்ளி மாணவிகளைத் தொடர்ந்து கூடைப் பந்து, ஷட்டில்காக், கொக்கோ போன்ற ஆட்டங்களில் மாநில, தேசிய போட்டிகளுக்குத் தயார் செய்து அனுப்பி வருகிறார்.

கணவர் கண்ணனும் உடற்கல்வி ஆசிரியர். மகள் வினோதினி (ஒன்பதாம் வகுப்பு) நெட் பாலில் தேசிய வீராங்கனை. மகன் சுதர்ஷன் (ஏழாம் வகுப்பு) ஹேண்ட் பால் ஆட்டத்தில் தேசிய வீரன்!

"வாழ்க்கை தடையோட்டமாக இருக்கலாம். ஆனால் தாண்டிக் குதிக்க ஒவ்வொருத்தரிடமும் சக்தி உண்டுங்க..." என்கிறார் காஞ்சனா!

- இருள்நீக்கியான்



* குடும்பத்துடன் காஞ்சனா...

படிப்பு மற்றும் உபரித் திறமைகளில் தொடர்ந்து சுணங்கி வந்த ஆறாயிரம் நடுத்தட்டு இந்தியச் சிறார்கள், பதின் பருவத்தினர் மத்தியில் ஒரு ஆய்வை மேற்கொண்டது இந்தியன் டென்டல் ரிசர்ச் ஃபவுண்டேஷன். ஆய்வின் முடிவில் அவர்கள் கண்டறிந்தது இதைத்தான்... 'ஈறுப்புண், பல்சொத்தை, பால் பற்கள் விழுந்து நிரந்தரப் பற்கள் முளைக்கும் போது ஏற்படும் பிரச்னைகள், நிரந்தரப் பற்களின் ஒழுங்கற்ற வரிசையில் வாய் திறந்து சுதந்திரமாய் சிரிக்க முடியாமல் குமுறும் நிலை ஆகிய பத்துக்கும் அதிகமான பல் பிரச்னைகள் இவர்களைத் தொடர்ந்து பாதித்து வந்திருக்கின்றன. இது படிப்பிலும் இவர்கள் சுணங்கி விடுவதற்கு ஒரு முக்கிய காரணம்.'

பல்லில் சொத்தையிருந்தால் படிப்பிலும் சொத்தையாகி விடுவார்களா? இரண்டரை வயது முதல் பத்தொன்பது வயதுக்குட்பட்ட பால்ய பருவத்தினரின் பற்கள் சார்ந்த பிரச்னைகளையும் தீர்வுகளையும் விவரிக்கிறார் சென்னை, அண்ணாநகர் வி.வி. பல் மருத்துவமனையின் தலைவரும் பல் மருத்துவ நிபுணருமான டாக்டர் என்.வி. ஆறுமுகம்.



• டாக்டர் என்.வி. ஆறுமுகம்

"குழந்தைகளுக்கு ஆறு மாதத்தில் தொடங்கி இரண்டரை வயதுக்குள் கீழ்த்தாடையில் பத்து, மேல்தாடையில் பத்து என இருபது பால் பற்கள் முளைத்துவிடும். இருபது பற்களும் முளைத்த பிறகு பிரஷ் செய்துவிட்டால் போதும். அதற்கு முன்பு வரை மெல்லிய காட்டன் துணியால் பற்களை மென்மையாகத் துடைத்துவிட்டாலே போதும். பிரஷிங் என்று வரும்போது ஃப்ளோரைடு இல்லாத சாதாரண டூத்பேஸ்ட் கொண்டு பல் துலக்கிவிட வேண்டும். குறிப்பாக பத்து வயதுவரை அம்மா அல்லது அப்பா இருவரில் ஒருவர் பல் துலக்கி விடுவது மட்டுமல்ல, இரவு படுக்குமுன்பு பிரஷ் செய்வதைக் கட்டாயமாக்கினால் பல் சொத்தையிலிருந்து தப்பிக்கலாம். அது தவிர ஒவ்வொருமுறை உணவு, பானங்கள், தின்பண்டங்கள் சாப்பிட்டு முடித்ததும் வாய் கொப்பளிப்பதை ஒரு வாழ்நாள் பழக்கமாகக் கற்றுத்தர வேண்டும். பெற்றோர்கள், பெரியவர்கள் முறையாக வாய் கொப்பளித்தாலே குழந்தைகள் தாந்தம் மாதிரி கற்றுக் கொள்வார்கள். இந்தப் பழக்கம் வந்துவிட்டாலே பல் பிரச்னைகளுக்கு குட்பை சொல்லிவிடலாம். எனினும் ஆறு மாதத்துக்கு ஒருமுறை உங்கள் பல் மருத்துவரிடம் பற்களைக் காட்டி, பரிசோதனை செய்துகொள்வதுதான் புத்திசாலித்தனம்.

சிறார்களுக்கு பல் சொத்தை ஏற்படாமல் இருக்க, 'பிட் அண்ட் ஃபிஷ்ஷர் சீலேண்ட்' (pit and fissure sealant) செய்து விடலாம். கடைவாய் பற்களின் மேல் தளம் அதிக மேடுபள்ளமாக இருக்கும். அதில் உணவுத் துகள்கள் படிந்து சொத்தையை உண்டாக்காமல் இருக்க 'பிட் அண்ட் ஃபிஷ்ஷர் சீலேண்ட்' என்ற மெல்லிய பேஸ்ட்டிங் மெட்டீரியல் இருக்கிறது. இதைப் போட்டுவிட்டால் பால் பற்களை சொத்தையிலிருந்து முழுமையாகப் பாதுகாத்து விடலாம். அடுத்த ஆறு மாதத்துக்கு ஒருமுறை பற்களுக்கு 'ஃப்ளோரைடு அப்ளிகேஷன்' (fluoride application) செய்து கொள்ளலாம். இதுவும் பல் சொத்தையைத் தடுக்கும்" என்றவர், புதிய பற்கள் முளைக்கும்போது ஏற்படும் பிரச்னைகள் பற்றிச் சொல்கிறார்.

"ஆறாவது வயது முதல் பால் பற்கள் விழுந்து நிரந்தரப் பற்கள் முளைக்க ஆரம்பிக்கும். ஏற்கெனவே இருந்த இருபது பற்கள் தவிர பக்கத்துக்கு மூன்று வீதம் பன்னிரண்டு பற்கள் கூடுதலாக முளைக்கும். இப்படி விழுந்து முளைக்கும்போது, பால்

* படம்: அஜித்

இதுபோன்ற சீரியல் எக்ஸ்ட்ராக்ஷன் சிகிச்சை பால்பல் விழுந்து நிரந்தரப் பற்கள் முளைக்கும்போது தேவைப்படலாம்.

பால் பற்கள் விழுந்து நிரந்தரப் பற்கள் முளைக்கும்போது ஒழுங்கற்ற பல் வரிசை ஏற்பட்டுவிட்டால் அதை 'ஆர்த்தோ டான்டிஸ்ட்' (Ortho Dontist) எனப்படும் கிளிப் சிகிச்சை மூலம் சரி செய்ய வேண்டும். இதற்கு ஒன்றரை ஆண்டுகள் தேவைப்படும். கல்விச் சுமையும், அரசுத் தேர்வுகளும் இல்லாத பத்து முதல் பன்னிரண்டு வயதுதான் சரியான காலகட்டம். பற்கள் சொன்னதைக் கேட்கும். இன்று கல்வித் தகுதியோடு நல்ல புன்னகையும் போட்டி நிறைந்த உலகத்துக்கு முக்கியம். எனவே தங்கள் குழந்தைகளுக்கு காலத்தே ஆர்த்தோ டான்டிஸ்ட் சிகிச்சை அளிக்க ஆவன செய்வது பெற்றோரின் கடமை" என்று கூறும் டாக்டர் ஆறுமுகம், "பதினெட்டு வயதில் முளைக்கும் 'விஸ்டம் டீத்' பிரச்னை ஏற்படுத்தினால் அறுவை சிகிச்சை மூலம் அகற்றி விடலாம். இன்று சொத்தையான பல்லைக்கூட காப்பாற்றி தக்க வைத்துக் கொள்ளும் அளவுக்குப் பல் சிகிச்சை நவீனமயமாகிவிட்டது" என்கிறார்.

# பால்யத்தை மிரட்டும் பற்கள்!

பற்களில் சில விழாமல் அடம் பிடிக்கும். இதனால் புதிதாக முளைக்கும் பற்கள் உள்பக்கமாக முளைக்கத் தொடங்கும். இந்த மாதிரி சூழ்நிலையில் பல் மருத்துவரிடம் குழந்தையைக் கூட்டிவரவேண்டும். இப்போது பல்லை எடுத்து விடலாம். அடுத்து, விழும் பால் பல் சிறியது. முளைக்கும் நிரந்தரப் பல்லோ அளவில் பெரியது. இதனால் பக்கத்திலிருக்கும் பால் பல்லைப் பிடுங்கி புதிதாக முளைக்கும் பல்லுக்கு இடம் ஏற்படுத்திக் கொடுக்க வேண்டும். இது தேவைப்படும் பட்சத்தில் மட்டுமே செய்யப்படும்.

- ஸ்ரீசக்கரம்



• புதுமுகப் பெருக்கு!

துக்குப் பாதுகாப்பு அல்ல.

● ஜே.வி.ஜே.கண்ணன், திருச்சி - 8

? தி.மு.க. பேச்சாளர்களுக்குக் கலைஞர் இட்ட பத்துக் கட்டளைகள் குறித்து தங்கள் கருத்து?

! அவை கட்டளைகள் அல்ல; ஜெயலலிதாவைத் தாக்கிப் பேசுவதற்கான பத்து விஷயங்கள். பதினொராவதாக, தனிப்பட்ட / ஆபாச தாக்குதல்கள் கூடாது என ஒரு கண்ணியம் காக்கும் கட்டளை பிறப்பித்திருக்கலாம்.

● எம். இலட்சுமி, டோம்பிவிலி மேற்கு

? கணவன் தூக்கத்தில் மும்முறை தலாக் சொன்னதால் தம்பதிகள் பிரிந்து வாழ வேண்டும் என்று மேற்கு வங்கத்திலுள்ள ஜல்பைகுரி மாவட்ட மதத் தலைவர்கள் உத்தரவிட்டுள்ளது பற்றி... அத் தம்பதி இந்த ஆணைக்குக் கீழ்ப்படிய மறுப்பது பற்றி?

! உத்தரவு வருந்தத்தக்கது. கீழ்ப்படிய மறுப்பது விரும்பத்தக்கது.

● தி.வி.கிருஷ்ணமூர்த்தி, சென்னை-20

? உலக வங்கி ஆய்வுப்படி நம் நாட்டில் துவக்கப் பள்ளி ஆசிரியர்களுள் 25 சதவிகிதத்தினர் பள்ளிக்கே வருவதில்லை. பள்ளிக்கு வரும் ஆசிரியர்களுள் பாதிப்பேர் பாடமே நடத்துவதில்லை. இது பற்றி...?

! மிகத் துயரமான செய்தி. இதன் தீவிரம் அனைத்துத் தரப்பினராலும் உணரப்பட வேண்டும். இந்நிலை சீர்படாத வரையில் பங்குச் சந்தை குறியீட்டெண் உயர்வு, அந்நியச் செலாவணி கையிருப்பு அதிகரிப்பு என்றெல்லாம் தம்பட்டம் அடித்துக் கொள்வது அபத்தம் மட்டுமல்ல; ஆபத்தும் கூட! ❒

# அ.தி.மு.க.வில் அதிக...



• பாவம், பா.ஜ.க!



• மரபுகாக்கும் முயற்சி!



• கிடுகிடு முயற்சி!



• பொய்யறிவுப் பேச்சு!

● எம்.சுசிலா, மின்னல்

? இந்தத் தேர்தலில் சு.சுவாமியின் பங்கைக் காணோமே?

! வி.எச்.பி. மாநாடு மேடையை அவர் அலங்கரித்ததைக் கவனிக்கவில்லையா நீங்கள்...? பா.ஜ.க. ஏமாறுமா என்று பார்க்க வேண்டும்.

● கொ.மூர்த்தி, குட்டலாடம்பட்டி

? அ.தி.மு.க. வேட்பாளர் பட்டியலில் புதுமுகங்கள் மிகுந்திருப்பது எதைக் காட்டுகிறது?

! யாரும் வளர்ந்துவிடக் கூடாது என்பதில் அதன் தலைவி மிகக் கவனமாக இருப்பதைத்தான் காட்டுகிறது. இது அவருக்குப் பாதுகாப்பாக இருக்கலாம். கட்சியின் எதிர்காலத்

● ஜி.குப்புசாமி,
சங்கராபுரம்

? தி.மு.க. அரசைக் கண்காணிக்க நிழல் அரசு அமைக்கப்படும் என்கிறாரே ராமதாஸ்?

! வரவேற்க வேண்டிய, ஜனநாயக மரபு காக்கும் நல்ல யோசனை.

● எஸ்.அன்புமணி,
ஈரோடு ✱

? படித்த டாக்டர்களே கேவலமான முறையில் கேள்வித்தான் மோசடியில் ஈடுபட்டுள்ள கொடுமையை எங்கே போய்ச் சொல்வது?

! அதைவிடப் பெரிய கொடுமை, இவர்களை நம்பி வைத்தியத்துக்கு வரும் நோயாளிகளுக்கு இழைக்கப்படும்... எனவே, சட்டம் விரைந்து செயல்பட்டு இவர்களுக்கு எம்.பி.பி.எஸ் அங்கீகாரத்தையும் ரத்து செய்ய வேண்டும்.

● என். சண்முகம்,
திருவண்ணாமலை

? 'பிராமணர்களின் பூணூலை பிய்த்தெறிய எங்களுக்கு ஒரு நிமிடம் கூட ஆகாது. அதைச் செய்ய எங்களுக்கு அச்சமும் இல்லை' என்று அறிவுமதி பேசியிருப்பது பற்றி...?

! மெய்யறிவும் நன்மதியும் செயல்பட்டால் இத்தகைய காழ்ப்புணர்ச்சியால் எதையும் சாதிக்க முடியாது என்பதைப் புரிந்து கொள்ளலாம்.

❐ ரூ.100/- பரிசு பெறுபவர்:

தி.வி.கிருஷ்ணமூர்த்தி
3-B, 'பத்மம்' புது எண் - 14, ஏழாவது குறுக்குத் தெரு, சாஸ்திரி நகர், சென்னை - 600 020

✱ ரூ.50/- பரிசு பெறுபவர்:

எஸ். அன்புமணி,
3, சொக்கநாத வீதி, ஈரோடு - 638 001

● பி. இராஜேந்திரன், லோயர் அணைக்கட்டு

? 'இலங்கைக்கு மட்டுமல்ல; தமிழகத்துக்கே தலைமை ஏற்கக் கூடியவன் பிரபாகரன்' என்று பெல்ஜியம் விழாவில் பேசியவர் திருமாவளவன். அப்படிப்பட்டவருக்கு இடமளித்த முதல்வரின் செயல் நியாயமா..?

! "தமிழகத்துக்கு மட்டுமின்றி இந்தியாவுக்கே தலைமை ஏற்கக்கூடியவர் ஜெயலலிதா" என்று திருமாவளவன் இப்போது சொன்னால் போதுமே, எல்லாம் நியாயப்பட்டுப் போய்விடும்!

● ஏ.எஸ். யோகானந்தம், ஔவையார்பாளையம்

? சடுகுடு விளையாடும் குழந்தை முதல் குடு குடு கிழவர் வரை அனைவருமே அம்மா ஆட்சியால்தான் பயனடைந்துள்ளார்கள் என்று காளிமுத்து சொல்வது?

! இன்றைக்குத் தொகுதி இல்லை என்று ஆகிவிட்டது. நாளைக்குப் பதவியும் இல்லை என்றாகிவிட்டால்...? அதனால் இடு இடு வென புகழுரைகளை அள்ளித் தெளித்துக் கொண்டிருக்கிறார்.

# ...புது முகங்கள் ஏன்?



• பேசாத பதினொன்று!

# நீங்கள் கேட்டவை -தராசு

ஒருநாள் போட்டியிலேயே அதிக பட்ச ரன்களான நூற்று தொண்ணூற்று ஆறை பாகிஸ்தானின் சயீத் அன்வர் குவித்ததும், டெஸ்ட் மேட்சில் அதிகபட்ச மாக பதினாறு விக்கெட்டை நரேந்திர ஹிர்வானி வீழ்த்தியதும் சேப்பாக்கம் மைதானத்தில்தான். இந்தப் பெருமைக்கு அடித்தளமிட்டவர் அதன் பிட்ச் கியூ ரேட்டரான பார்த்தசாரதி. சச்சின் டெண் டுல்கரின் வயது, இவரது அனுபவம்.

"நான் பி.எஸ்.சி. தாவரவியல் படித் தவன். ஆரம்பத்தில் பிட்ச் அமைக்கும் பணியில் என் அப்பா ஈடுபட்டு வந்தார். அப்போது எனக்கு ஐசிஎஃப். மற்றும் ஈபி. என இரு அரசுப் பணிகளில் பணியாற்ற சந்தர்ப்பம் கிடைத்தது. ஆனால் எம்.ஏ. சிதம்பரம் ஒரு நாள் என்னிடம், 'இனி மேல் சேப்பாக்கம் மைதானத்துக்கு நீதான் எல்லாமும்' என்று கட்டளையிட்டுவிட் டார். அவர் பேச்சை என்னால் தட்ட முடியவில்லை. 1972 முதல் என் மேற் பார்வையில் அமைக்கப்பட்ட பிட்ச்களில் பல உலகப் புகழ்பெற்ற ஆட்டங்கள் நடந் துள்ளன. முதன்முதலாக டெஸ்ட் மேட்ச் 'டை' ஆனதும் இங்குதான்" என்றவர், பிட்ச் அமைக்கும் சூட்சுமங்கள் பற்றிச் சொன்னார்.

"பிட்ச் தயாரிப்பது என்பது ஒரு வீடு கட்டுவது போலத்தான். பிட்ச் இடம் பெறும் தரை கடினமான இருந்தால் இரண்டு அடி ஆழம் தோண்ட வேண் டும். தளர்ந்த நிலமென்றால் மூன்று அடி. அதில் முதலில் இரண்டு அங்குலத்துக்கு ஆற்று மணலைக் கொட்ட வேண்டும். அதன்மீது மூன்று அங்குலத்துக்கு கருங்கல் ஜல்லி பரப்ப வேண்டும். சந்துகளில் ஆற்று மணலைப் போட்டு, நீர் தெளித்து நன்கு பேக் செய்ய வேண்டும். அடுத்து இரண்டு அடுக்குகள் செங்கற்கள். ஒன்று பக்கவாட்டிலும் மற்றொன்று செங்குத் தாகவும். இடைவெளிகளை மணலைக் கொண்டு நிரப்பி அதன் மேற்பரப்பில் மீண்டும் இரண்டு அங்குலத்துக்கு ஆற்று மணலை நிரப்பி, நீர் தெளித்து பிட்சின் மேற்பரப்பை நன்கு கம்ப்ரஸர் கொண்டு கடினப்படுத்த வேண்டும். பிறகு செம் மண்ணையும் களிமண் தூளையும் இட்டு நிரப்பி, அதன்மீது புல்லை நாற்று நடு வதுபோல் நடவேண்டும். அவ்வளவுதான், பிட்ச் ரெடி. மூன்று மாதம் ஆனபின்பு பிட்ச் நன்கு கடினமாகி விளையாடுவ தற்குத் தோதாகிவிடும். அதேபோல மைதானம் முழுக்க ஆறு அங்குலம் தோண்டி எடுத்து ஆற்று மணல், செம் மண், சாண எரு போன்றவற்றை நிரப்பி அதன்மீது புற்களை நட்டு, சம அளவில் வெட்டி, ரோல் செய்து, மெத்தை போன்ற அவுட்ஃபீல்டை உருவாக்குவோம். சர்வ தேச போட்டிகள் நடக்கும் சமயத்தில் பிட்சைப் பராமரிக்க அதற்கு ஒரு மாதம் ஓய்வு கொடுப்போம். ஒரு நாள் போட்டி யின்போது பிட்சில் உள்ள புற்களை வெட்டி விடுவோம். அப்பொழுதுதான் அதில் நிறைய ரன்களைக் குவிக்க முடி யும். பொதுவாக இந்தியா ஜெயிப்பதற்கு ஏற்றாற்போல்தான் பிட்ச் தயாரிக்கப் படும்.

ஒவ்வொரு ஊரிலும் அந்தந்த தட்ப வெப்ப நிலைக்கு ஏற்ற மாதிரிதான் பிட்ச் தயாரிக்க முடியும். இப்போது கியூரேட் டர்களை வேளாண்மைக் கல்லூரிக்கு அனுப்ப வேண்டும் என்று ஐ.சி.சி. சொல் கிறது. கியூரேட்டர்ஷிப் என்றொரு படிப்பும் தற்போது உள்ளது. ஏட்டுச் சுரக்காய் பிட்சுக்கு உத வவே உதவாது. பட்டறி வும் தட்பவெப்ப நிலை மைக்கு ஏற்றவாறு சமா

# "இந்தியா ஜெயிப்பதற்குத்தான் பிட்ச்!"

ளிக்கும் சாதுர்யமும் இருந்தால் மட்டுமே ஒரு நல்ல கியூரேட்டராக ஜொலிக்க முடியும். டி.வி.யில் பிட்ச் பற்றிய வர்ணனைக்கு நாலும் அறிந்த என்னைப் போன்ற அனுபவஸ்தர்களைக் கேட்காமல் முன்னாள் கிரிக்கெட்டர்களை வைத்து பிட்ச் ரிப்போர்ட்டிங் செய்கிறார்கள். உங்களுக்கே தெரியும், அவர்கள் சொல்வது எவ்வாறெல்லாம் தலைகீழாக மாறுகிறது என்று" பூடகமாகச் சிரித்த பார்த்தசாரதி, தொடர்ந்து பிட்சின் தன்மைகளை விளக்கினார்.

"பிட்சுக்கும் உயிர் உண்டு, சுவாசம் உண்டு. மழைக் காலங்களில் பாலிதீன் கவர்களால் பிட்சை மூடிவிடுவதால் மூச்சுவிட முடியாமல் திணறுகிறது. இதனால் அதன் தன்மைகள் மாறிவிடுகின்றன. பிட்ச்சில் வெடிப்பு இருந்தால் மட்டும் ஸ்பின்னர்களுக்கு உதவும் என்று கூற முடியாது. வெடிப்பின் ஓரத்தில் மொழுமொழுவென்று இருந்தால் பந்தை எப்படிச் சுழற்றினாலும் திரும்பாது. வெடிப்பின் நுனியைத் தேய்த்தால் அது உடைய வேண்டும். அப்போதுதான் ஸ்பின் எடுக்கும். வெளிநாட்டு பிட்சுகளில் ஆஸ்திரேலியாவிலுள்ள சிட்னியில் மட்டுமே ஸ்பின்னர்களுக்குச் சாதகமான பிட்ச் உள்ளது" என்று கூறுபவருக்கு சமீபத்தில் சென்னைக்கு ஒதுக்கப்பட்ட பல போட்டிகள் மழையால் பாழானதில் மிகவும் வருத்தம்.

"என் முப்பத்திமூன்று வருட அனுபவத்தில், சமீபத்தில் தென்னாப்பிரிக்காவுடனான ஒரு நாள் போட்டி மட்டும்தான் ஒரு பந்துகூட வீச முடியாமல் ரத்தாகியிருக்கிறது. அன்று நான் அழுதே விட்டேன். இப்பொழுது வடிகால் முறையை மேலும் நவீனப்படுத்த உள்ளோம். வெளிநாடுகளில் உள்ளதுபோல் மைதானத்துக்கு அடியில் பைப்புகள் பொருத்தி மழை நீரை அப்புறப்படுத்தப் போகிறோம்" என்றவர், தம் மனச் சுமைகளையும் இறக்கி வைக்கத் தவறவில்லை.

"இந்தப் பணியில் நன்றியை எதிர்பார்க்க முடியாது. வெற்றி பெறுகிற அணி என் மீது பூத்தூவிவிட்டுச் செல்லும். தோற்கும் அணியோ வெளியே தெரியாதவண்ணம் என்மீது சேற்றை வாரி இறைக்கும். கோபத்தில் பலருக்கு நாக்கு தடித்ததுண்டு. வெளிநாடுகளில் கியூரேட்டர்களைக் குறையில்லாமல் கவனித்துக் கொள்கிறார்கள். கிரிக்கெட் போர்டு வசதியாக இருந்தாலும் என்னைப் போன்ற கியூரேட்டர்களுக்கு வழங்கப்படும் சம்பளம் மிகவும் குறைவுதான். நான் அரசு வேலைக்குச் சென்றிருந்தால் இதற்கு மேல் சம்பாதித்து, பல பலன்களை அடைந்திருப்பேன். ஆனால் நிச்சயம் இதில் கிடைக்கும் மனநிம்மதியும் பெருமிதமும் வேறு எந்தத் தொழிலிலும் கிடைத்திருக்காது" என்றபடி பிட்சை வாஞ்சையாகத் தடவிக் கொடுக்கிறார் பார்த்தசாரதி.

- சநகன்

படம் : ஓம்



• பார்த்தசாரதி

சென்னை கே.கே.நகர் பேருந்து நிலையம், ஈ.எஸ்.ஐ மருத்துவமனையை ஒட்டி ஒரு மினி காலனியே இயங்கிக் கொண்டிருக்கிறது. பல வருடங்களாக இங்கு நடைபாதையையே வீடாக்கி வாழ்ந்து வருகின்றனர் ஏழைபாழைகள். நாம் அங்குபோனபோது கட்டட வேலை முடித்து சாரை சாரையாகத் தங்களது இருப்பிடத்துக்குத் திரும்பிக் கொண்டிருந்தனர்.

"காலையில ஆறு மணிக்கெல்லாம் வேலைக்குக் கிளம்பிடுவோம். நைட் பன்னிரண்டு மணி வரைக்கும் இப்படி வந்துட்டேதான் இருப்போம்" என்று, சாலையில் செல்லும் வாகனங்களின் நச்சுக் காற்றில் இளைப்பாறியபடி பேசினார் பசுபதி. 'சுகாதாரமா, கிலோ என்ன விலை' என்று கேட்கும் இடத்தில்தான் கழிகிறது இவர்களது வாழ்க்கை. சாலையிலேயே சமைத்துச் சாப்பிட்டு, துணி, பாத்திரம் சுத்தம் செய்து, பொழுதைப் போக்கி அங்கேயே உறங்குகின்றனர். இங்கு வாழும் முந்நூறுக்கும் மேற்பட்ட குடும்பங்களில் பெரும்பாலோனோர் தொழில் நகரமான நாமக்கல் மாவட்டத்தைச் சேர்ந்தவர்கள் என்பது ஆச்சர்யத் தகவல்.

"நாமக்கல்ல வேலை ஏதும் கிடைக்கலீங்க. பஞ்ச பூமிங்க அது. நூத்தி அம்பது அடி கிணறுகூட வெடிப்பு வந்து மூச்சு இழுத்துட்டுக் கிடக்கு. எல்லாமே கோழி யாவாரம், லாரி ட்ரிப்னு போனதால எங்கள மாதிரி விவசாய வேலையையும் கட்டட வேலையையும் நம்பியிருந்தவங்களுக்குப் பொழப்பில்லாமப் போச்சு. கூலியும் எண்ணித்தான் கொடுப்பாங்க. பொம்பளையாளுக்கு நாப்பது ரூபாயும் ஆம்பளையாளுக்கு அறுபது ரூபாயும் கொடுத்தா போதுங்களா? எங்க கொழந்தை குட்டியையாவது நல்லா படிக்க வைக்க வேணாங்களா? அதான் கொழந்தையை அவங்கவங்க அம்மா வீட்டுல விட்டுட்டு புருஷனும் பொஞ்சாதியுமா வரிசையா மெட்ராஸுக்குக் கிளம்பி வந்துட்டமுங்க. இங்க வேலைக்குக் குறைச்சலில்லீங்க. மாசம் எப்படியும் இருபது நாளைக்கு கான்கிரீட் வேலையோ, இல்ல மண் சுமக்குற வேலையோ கிடைச்சிடும். ஜோடியா போனா முந்நூறு தர்றாங்க. மாசம் ரெண்டாயிரம், மூவாயிரம் ரூபாயை

# பிளாட்ஃபாரம்



• 'நாங்களும் இந்நாட்டு மன்னர்கள்தான்!'



* கேப்போம்... கேப்போம்... கேட்டுக்கிட்டே இருப்போம்...!

# காலனி!

ஊருக்கு அனுப்பிடுவோம். ஊருல எல்லோருக்கும் சொந்தமா தார்ஸ், ஓட்டு வீடெல்லாம் இருக்குங்க" என்றார் அங்கம்மா.

யார் முதலில் ஒரு குறிப்பிட்ட நடைபாதை பகுதியைக் கைப்பற்றுகிறார்களோ அவர்களுக்கே அந்த இடம் சொந்தம். ஒரு சிலர் கைப்பற்றிய இடத்தை வாடகைக்கு விடுவதும் உண்டாம். சென்ற ஆட்சியில் ஒருமுறை இவர்களை அப்புறப்படுத்த போலீஸும் மாநகராட்சி அதிகாரிகளும் முனைந்துள்ளனர். ஆனால் இவர்கள் ஒற்றுமையோடு போராடித் தங்களுடைய நிலைமையை விளக்கியதில் 'போனால் போகட்டும்' என்று அதிகாரிகள் விட்டிருக்கிறார்கள்.

"மழை, வெள்ளம் வந்தா பக்கத்திலிருக்கிற ஈஎஸ்.ஐ, இல்லாட்டி கே.கே.நகர் பஸ் டிப்போவுக்குள்ள ஒதுங்கிடுவோம். கட்டணக் கழிப்பிடத்துல தலைக்கு ஒரு ரூபா கொடுத்துத்தான் குளிக்க முடியும். தண்ணி லாரி வரும். ரெண்டு ரூபா கொடுத்தா ஒரு குடம் பிடிச்சுக்கலாம்" என்று அரிசி களைந்து கொண்டே சொன்னார் சுப்ரமணி.

பொழுதுபோக்கு? "ரேடியோதான். 24 மணி நேரமும் கேப்போம்... கேப்போம்... பாட்டு கேட்டுக்கிட்டே இருப்போம். பக்கத்துலேயே உதயம் கொட்டாய் இருக்குங்க. ஒரு சினிமா வுடமாட்டோம். மொத நா ராத்திரியே பார்த்திருவோம்" என்று செந்தில் பேசிக் கொண்டிருந்த போதே அவர் பாக்கெட் துடித்தது. வைப்பரேட்டரில் செல்போன் ஒலி. இங்குள்ள பலரிடமும் செல்போன் உள்ளது. (பெரும்பாலும் பி.எஸ்.என்.எல் கனெக்ஷன்தான்) "எங்களுக்கு ஏதுங்க அட்ரஸெல்லாம்?- எல்லாத்துக்கும் பக்கத்துல இருக்கிற மளிகை, டீக்கடை அட்ரஸ்தாங்க கொடுப்போம்" என்று செல்போனில் ஒரு மெஸேஜ் அனுப்பிவிட்டு பாக்கெட்டுக்குள் செருகினார் செந்தில்.

படிப்பு, நிரந்தர வேலை, தங்க இடம் என்று எதுவும் இவர்களிடத்தில் இல்லை தான். ஆயினும் இவர்கள் தங்களுடைய முக்கியமான ஒரு கடமையைச் செய்யத் தவறுவதில்லை. ஒவ்வொரு தேர்தல் சமயத்திலும் காசு செலவு செய்து ஊருக்குச் சென்று வோட்டுச் சாவடியில் தங்களுடைய ஜனநாயகக் கடமையை முறையாகப் பதிவு செய்கின்றனர்.

- ச.ந.கண்ணன்

படங்கள்: பப்பி

# வாக் தி லைன்

ஆஸ்கரின் இறுதிச் சுற்றை அடைந்த படம். கதாநாயகிக்கு ஆஸ்கர் பெற்றுத் தந்த படம். அமெரிக்கர்களின் கண்முன்னே வாழ்ந்து மறைந்த இரண்டு இசைக் கலைஞர்கள் குறித்த உண்மைக் கதை. கவனத்தை ஈர்க்க வேறென்ன வேண்டும்?

ஜானி கேஷ் ஒரு பிரபல பாடகர். சிறைக் கைதிகளோடு அவர் நிகழ்த்திய இசை நிகழ்ச்சி ஆல்பமாகவும் சூப்பர் ஹிட். இவரது பாடல்களில் கீழ்த்தட்டு மக்களின் உணர்வுகளுக்கு முக்கிய இடம். புகழ்போதையின் உச்சத்தில் (ஆண்டுக்கு முந்நூறு நிகழ்ச்சிகள்!) போதை மருந்துக்கும் அடிமையாக, மனைவி பிரிந்து விடுகிறாள். இந்தக் காலகட்டத்தில் ஜூன் கார்ட்டர் என்ற இசைக் கலைஞரை ஜானி சந்திக்கிறார். ஜூன் அடுத்தடுத்து இருவரை மணந்தும் தனியானவள். இரு குழந்தைகளுக்குத் தாய். ஜானியும் ஜூனும் இணைந்து இசை நிகழ்ச்சி நடத்துகிறார்கள். ஜானியை போதை மருந்து பழக்கத்தில் இருந்து மீட்டு புது வாழ்க்கைக்குத் திருப்புகிறாள் ஜூன். இருவரும் இறுதியில் மணந்து கொள்கிறார்கள்.

திரைக்கதை முழுவதும் இரண்டு பிரதான பாத்திரங்கள் மட்டுமே. சராசரியாக மூன்று காட்சிகளுக்கு ஒரு பாடல் என்று மியூசிகல் வகை. மயக்கும் இசை.

கதாநாயகன் ஃபோனிக்ஸும் கதாநாயகி ரீஸ் விதெர்ஸ்பூனும் சொந்தக் குரலில் பாடியிருக்கிறார்கள். நடிப்பு, பாடல் இரண்டிலுமே அசத்துகிறார்கள். காமெடி, நடிப்பு, நாடோடிப் பாடல்கள் என்று மேடையில் மூவகை முத்திரையைப் பதித்த ஜூன் கார்ட்டர் பாத்திரத்தை மிகவும் உயிரோட்டமாகச் சித்திரித்திருக்கிறார் ரீஸ்.

தன் நிகழ்ச்சியை முடித்துக்கொண்டு மேடைக்குப் பின்புறம் செல்லும் நாயகனின் கிடார் பட்டையில், அடுத்த நிகழ்ச்சியில் கலந்துகொள்ள ஓடிவந்து கொண்டிருக்கும் நாயகியின் கவுன் சிக்கிக் கொண்டுவிடுகிறது. விடுவிக்க முயற்சித்துக் கொண்டே நாயகி திரைக்கு மறுபக்கம் இருக்கும் பார்வையாளர்களிடம் பேசுவதில் இருந்து தொடங்குகிறது ஜூன் பாத்திரத்தின் உற்சாக ஆரம்பம்.

ஜானிக்கு முதல் வாய்ப்புத் தரும் ஸ்டுடியோ முதலாளி, ஜானியின் முதல் மனைவி ஆகிய பாத்திரங்களை ஏற்கும் நடிகர்கள் கொஞ்சமாக வந்தாலும் நிறைவாகச் செய்திருக்கிறார்கள்.

சந்தித்து பத்து வருடங்கள் கழித்துத் தான் ஜூன், ஜானியைக் காதலிக்கவும் திருமணத்துக்கும் ஒப்புக்கொண்டார் என்பதும், அதற்குப் பிறகு 35 வருடங்கள் இணைந்து வாழ்ந்து ஒரே வருடத்தில் (2003) இறந்தனர் என்பதும் நெகிழத்தக்க வாழ்க்கைதான். அதுவும் வேகமாக இணைந்து, வேகமாக பிரியத் தயங்காத அமெரிக்க கலாசாரத்தில்.

-ஜி.எஸ்.எஸ்.



Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / CC (S) DN / 144 / 06 - 08 * Licensed to post without prepayment under PMG's Licence No. WPP TN / CC (S) DN / 70 / 06 - 08* Registered as a Newspaper in Srilanka.